




# CHANDAMAMA

It unfolds the glory of India—both past and present—through stories, month after month.

Spread over 64 pages teeming with colourful illustrations, the magazine presents an exciting selection of tales from mythology, legends, historical episodes, glimpses of great lives, creative stories of today and knowledge that matters.

**In 11 languages and in Sanskrit too.**

Address your subscription enquiries to:
**DOLTON AGENCIES** 188 N.S.K. ROAD MADRAS-600 026



# அம்புலிமாமா

## மார்ச் 1996



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ.5.00

வருட சந்தா ரூ.60.00

# முதன் முதலாக
# பரீட்சித்து பார்ப்பதற்கான திட்டம்

## வெள்ளை புள்ளி



50 வருடங்களாக தொடர்ந்த பரீட்சையினால், வெள்ளைத் தழும்புக்கான சிகிச்சையில் வெற்றி கிடைத்துள்ளது. இது எவ்வளவு சக்தி வாய்ந்தது என்றால் சிகிச்சையை ஆரம்பித்த உடனேயே, 36 மணி நேரத்தில் தழும்பின் நிறம் மாறத் தொடங்கி, கூடிய சீக்கிரத்தில் தழும்பு உண்டாவதற்கான காரணங்களை அழித்து, தோலின் நிறத்தோடு நிரந்தரமாக சேர்ந்து விடுகிறது. இப்போது விளம்பரத்திற்காக, நீங்கள் முதன்முதலாக பரீட்சித்து பார்ப்பதற்காக 7 நாட்களுக்கான மருந்து இலவசமாக அளிக்கப்படுகிறது இதன் மூலம் நீங்கள் பரீட்சித்து பார்த்து குணத்தை அறியலாம். திருப்தி ஏற்பட்டால் மட்டுமே சிகிச்சையை தொடரலாம் அதனால் மனம் தளர்ந்த வியாதிஸ்தரும், வேறு சிகிச்சை பெறும் வியாதிஸ் தரும் இந்த திட்டத்தின் பலனை அடையலாம். வியாதிஸ்தரின் வயது, வியாதி பாதிக்கப்பட்ட இடம், வியாதி எவ்வளவு நாட்களாக உள்ளது என்பனவற்றையும் கண்டிப்பாக எழுதி அனுப்பவும்.

## முடி உதிர்தல் / நரைத்தலுக்கு சிகிச்சை



தலைமுடி உதிர்வதற்கோ தலைமுடி நரைத்தலுக்கோ கவலைப் படவேண்டாம். பழைய ஆயுர்வேத புத்தகத்தில் எழுதப்பட்ட மிகச் சிறந்த கூட்டு முறைப்படி ஆராய்ச்சி செய்யப்பட்ட மருந்து கலவை உபயோகிப்பதால் தலைமுடி உதிர்தல் அல்லது நரைத்தல் முதலியவை முடியின் வேர்களில் இருந்து தடை செய்யப்படுகிறது. இந்த பகுதியில் புதிய முடி வளர்ந்து நரைத்த முடி கருமை நிறமாக மாறுகிறது அது உங்கள் மூளையை குளிர்ச்சியாகவும் நினைவு சக்தியைக் கூர்மையாகவும் ஆக்குகிறது. ஆண்களும் பெண்களும் முடியின் வியாதி, எவ்வளவு நாட்கள் உள்ளது என்பதை விவரமாக எழுதவும். சிகிச்சை முறை மற்றும் ஆலோசனைக்கு எழுதுங்கள். சிகிச்சை விலை ரூ. 100/- மட்டும்.

## SHYAM AYURVED BHAVAN

(SB-3) P.O. Katrisarai (Gaya) - 805 105 Ph. 06112 - 74311




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

## தேர்வுகளை நோக்கி...!



பல ஆண்டுகளுக்கு முன்னும் சரி, இப்போதும் சரி பொதுத்தேர்வுகளும் ஆண்டுத்தேர்வுகளும் பள்ளிகளிலும் மற்ற கல்வி நிலையங்களிலும் ஒவ்வொரு ஆண்டிலும் மார்ச் மாத மத்தியிலிருந்து ஆரம்பமாகின்றன. தேர்விற்காக மாணவர்கள் ஒரு போர்முனைக்குச் செல்லும் வீரர்கள் போலத் தம்மைத் தயார் செய்து கொள்கிறார்கள்.

இவர்கள் நன்கு படிக்க தேர்வுகளுக்கு முன் பதினைந்து நாட்கள் விடுமுறை அளிக்கப்படுகிறது. மொழி, கணிதம், விஞ்ஞானம், வரலாறு, புவிஇயல் என்று பலதரப்பட்ட பாடங்களை அன்றைய மாணவர்கள் படித்ததையேதான் இன்றைய மாணவர்களும் படித்து வருகிறார்கள். வகுப்பறைகளில் ஆசிரியர்கள் கற்பிப்பதைக் கேட்கிறார்கள். தம் வீடுகளுக்கு வந்து மாணவர்கள் திரும்ப அதையே துணை நூல்களின் உதவி கொண்டு இரவும் பகலும் விழுந்து விழுந்து படிக்கிறார்கள்!



இந்தக் கல்வி முறை ஒரே முறையில் இல்லாது அவ்வப்போது மாறுதல் அடைய வேண்டும். மாறுதல் முன்னேற்றத்திற்கு வழி. மாணவர்களும் இம்மாதிரி மாற்றங்களால் பெரும் பயனை அடைவார்கள். இதுபற்றி யாவரும் சிந்திக்க வேண்டும்.

மாணவர்கள் நன்கு படித்து வரப் போகும் தேர்வுகளில் வெற்றி பெற வேண்டுமென வாழ்த்துகிறோம்.

**மதிமுகம்: 98** **மார்ச் 1996** **புன்னகை: 3**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**



## Statement about ownership of AMBULIMAMA (Tamil)
## Rule 8 (From VI), Newspapers (Central) Rules, 1956

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

1st March 1996

செய்திகளும் தகவல்களும்:

# தடைகள் விலக்கப்பட்டன

இரண்டாவது உலகப் போர் (1939–45) முடிந்ததும் அதற்குப் பின் முப்பது வருடங்கள் தம் நாட்டில் ஆயுதப் போரை நடத்திக் கொண்டிருந்த நாடு வியட்நாம். பிரஞ்சுக்காரர்களிடமிருந்து விடுதலை பெற அங்கு எட்டாண்டு காலம் ஹோசிமின் தலைமையில் விடுதலைப் போர் நிகழ்ந்தது. பிரஞ்சுப் படைகள் வெளியேறிய பின் 1954 ஜெனிவா ஒப்பந்தப்படி அந்நாட்டின் வட பகுதி கம்யூனிஸ்ட் வியட்நாம் என்றும் மற்ற பகுதி தெற்கு வியட்நாம் என்றும் இரு பகுதிகளாக ஆகின.

இத்துடன் உள்நாட்டுப் போர் நின்று விடவில்லை. தென் வியட்நாமிலுள்ள கம்யூனிஸ்ட் கொரில்லாக்கள் வட வியட்நாமின் படை உதவி கொண்டு தென் வியட்நாம் படையினை தாக்கினர். தென் வியட்நாமிற்கு அமெரிக்க உதவி கிடைக்கவே போர் வலுத்தது. அமெரிக்கா 1959லிருந்து 69க்குள் 5,50,000 வீரர்களை அனுப்பியது. ஆயிரக் கணக்கில் அமெரிக்க வீரர்கள் மடியவே, வியட்நாமிற்குப் படைகளை அனுப்பக் கூடாது என்று அமெரிக்காவில் எதிர்ப்பு தோன்றியது. 1972ல் கம்யூனிஸ்ட்கள் நடத்திய வலுவான தாக்குதலால் அமெரிக்கா தன் படைகளை பின் வாங்கி வரவழைத்துக் கொண்டது. அப்படியும் அந்த இந்தோ சீன தீபகற்பத்தில் போர் நிற்க மேலும் இரண்டு ஆண்டுகள் பிடித்தன.

வியட்நாமில் தனக்கு ஏற்பட்ட படுதோல்வியை அமெரிக்கா மறந்து விடவில்லை. அதனால் அது இருபது ஆண்டு காலம் வியட்நாமைத் தன் எதிரியாகவே கருதி வந்தது. அதனால் அமெரிக்கா அதன் மீது பொருளாதாரத் தடைகளை விதித்தது. 1992ல் அமெரிக்க ஜனாதிபதி ஜார்ஜ் புஷ் தடைகளைக் கொஞ்சம் தளர்த்தினார். இந்நடவடிக்கை 1994ல் அமெரிக்க ஜனாதிபதி பதவிக்கு வந்த பில் கிளிண்டனுக்கு வியட்நாமின் மீது விதித்த தடைகளை முழுவதுமாக விலக்கி விட பலம் அளித்தது. இதற்கு ஓராண்டிற்குப் பின் அமெரிக்கா வியட்நாமுடன் தூதரகப் பரிமாற்றம் செய்து கொள்ள முன் வந்தது. ஆபிரஹாம் லிங்கனை நினைவுபடுத்துவதை போல கிளிண்டன் ''காயங்கள் ஆற, அவற்றை மறந்து புதிய தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள தக்க தருணம் வந்து விட்டது'' எனக்கூறி நேசக் கரம் நீட்டினார்.

மகிழ்வூட்டும் இச்செயல் அமெரிக்கவையும் வியட்நாமையும் நட்புறவு கொள்ளச் செய்து அது மேலும் உறுதிபெறும் என்ற நம்பிக்கையே அளிக்கிறது.






# குருவும் சீடனும்

காஞ்சிபுரத்தில் கனகநாதர் என்ற மகா பண்டிதர் இருந்தார். அவரிடம் கல்வி பயில சிவநேசன் என்ற வாலிபன் வந்தான். கனகநாதரும் அவனை அன்புடன் வரவேற்று ''என் மற்ற மாணவர்கள் வேதங்களை அத்யயனம் செய்து கொண்டிருக்கிறார்கள். நீ வேதங்களைக் கற்குமுன் என்னுடன் இருந்து பணிவிடைகள் புரிய வேண்டும். அதன் பிறகு நீ என் சீடனாகத் தகுதி பெற்றவனா என நான் தீர்மானிப்பேன்'' என்றார்.

சிவநேசனும் ''ஐயா! எனக்குப் போதிய உலக ஞானம் உள்ளது'' என்றான். அதுகேட்டு அவர் புன்னகை புரிந்து பேசாமல் இருந்தார். அன்று மாலை சிவநேசன் அங்குள்ள மாணவர்களில் ஒருவனைச் சந்தித்து ''இந்த குரு மிகவும் உயர்ந்தவரென நினைத்தேன். ஆனால் சிறிது காலம் என்னை அவர் தனது பணியாளாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறார். நீங்கள் சேர்ந்த போதும் இப்படித்தான் பணிபுரிந்தீர்களா?'' என்று கேட்டான்.

அந்த சீடனோ ''நீ குருவுடன் சேர்ந்து இருப்பது அதிர்ஷ்டமே. அப்போதுதான் படித்துத் தெரிந்து கொள்வதை விட உலக ஞானம் நன்கு தெரியும். இந்த மாதிரி வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லையே'' என்றான். ஆனால் சிவநேசனோ தனக்கு நிறைய உலக ஞானம் இருப்பதால் குருவுடன் சேர்ந்து இருப்பது வீண் என நினைத்தான். எனவே அன்றிரவு அவன் தன் குருவிடம் ''ஐயா! எனக்கு போதிய உலக ஞானம் இருக்கிறது என்பதை தங்களிடம் முன்பே கூறியுள்ளேன். எனவே என்னையும் அத்தியயனம் செய்ய அனுமதியுங்கள்'' என்றான்.

அதுகேட்டு கனகநாதர் முன்போலப் புன்னகை புரிந்து பேசாமல் இருந்தார். மறுநாள் காலை குளித்து

—பாபநாசம் சாமா—

முடிந்ததும் அவர் சிவநேசனை அழைத்து ''வா! இயற்கையின் காலை அழகைப் பார்த்து எழுதிக் கொள்ள வேண்டும். இதுபற்றி நம் கவிஞர்கள் எப்படியெல்லாம் கூறியுள்ளார்கள் என்று பரிசீலித்துப் பார்க்க வேண்டும். ஒரு கவிஞர் கூறியதற்கும் இன்னொரு கவிஞர் கூறியதற்கும் என்ன வித்தியாசம் என்று பார்க்க வேண்டும். இதுவும் உலக ஞானமே'' என்றார்.

வழியில் அவர்களெதிரே கவிஞர் கலாதாசன் வந்து கொண்டிருந்தார். அவர் அப்போது ஆற்றில் குளிக்கச் சென்று கொண்டிருந்தார். அவர் கனகநாதரைக் கண்டதும் வணங்கி ''ஐயா! இன்று என் வீட்டில் தாங்கள் விருந்துண்ண வர வேண்டும்'' என்று வேண்டினார்.

கனகநாதரும் ''என்ன விசேஷமோ?'' என்று கேட்க கலாதாசனும் ''ஒன்றுமில்லை. என் வீட்டிற்கு என் மாமியார் ஊரிலிருந்து ஒரு சமையல்காரன் வந்திருக்கிறான். அவனது சமையல் நளபாகம் என்று புகழ்கிறார்கள். நாளை அவன் ஊருக்குப் போய் விடுவான். நீங்கள் கண்டிப்பாக அவனது சமையலை ருசி பார்க்க வேண்டுமென்றுதான் இன்று உங்களை அழைக்கிறேன்'' என்றார்.

கனகநாதரோ ''இப்போது என் உடல் நிலை சரியில்லை'' எனவே கலாதாசனும் ''அடடா! நாளை நான் நாகலாபுரம் ஜமீன்தாரர் மாளிகைக்குப் போய் என் காவியத்தை அவருக்குச் சமர்ப்பிக்க வேண்டும்'' என்றார்.



கனகநாதரும் ''அதில் சில தவறுகள் இருப்பதை யாரோ சுட்டிக் காட்டியதாகக் கேள்விப்பட்டேனே'' எனவே கவிஞரும் ''ஆமாம். தாங்களும் அதை ஒருமுறை பார்த்தால் சரியாக இருக்கும்'' என்றார். கனகநாதரும் ''ஒரு காவியத்தில் தவறுகளைக் கண்டு திருத்த ஒருநாள் போதாது. அதனை ஒரு வாரமாவது பரிசீலிக்க வேண்டும். அவ்வளவு நாட்கள் நீங்கள் காத்திருக்க முடியாதே. நாளையே நீங்கள் போக வேண்டுமே'' என்றார். கவிஞரும் ''என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான்'' என்று கூறிக்கொண்டே போய் விட்டார்.

கனகநாதர் ''என் உடல் நிலை



கனகநாதரும் ''ஓகோ! கல்வியையும் வியாபாரத்தையும் இணைத்துப் பார்க்கிறீர்களா. சரி. ஆனால் இன்று நான் வருவதற்கு சௌகரியப்படாதே. ஏனெனில் வேறொரு இடத்திற்கு வருவதாக ஏற்கனவே வாக்களித்து விட்டேனே'' எனக் கூறிவிட்டு முன் சென்றார்.

சற்று தூரம் சென்றதும் அவர் சிவநேசனிடம் ''இவரிடமும் பொய்தான் கூறினேன். இன்று என்னை வேறு யாரும் அழைக்கவில்லை'' என்றார். சிவநேசன் எதுவும் கூறாமல் தன் குரு இப்படிப் பொய் பேசுகிறாரே என்று நினைத்துக் கொண்டான்.

அப்போது அடுத்த ஊர் வைர வியாபாரி வையாபுரி வந்து கொண்டிருந்தான். அவனும் கனகநாதரை வணங்கி ''என் வண்டியில் ஏறிக் கொண்டு இப்போதே எங்கள் ஊருக்கு வந்து என் வீட்டில் சாப்பிட்டு விட்டு நான் கொடுக்கும் அன்பளிப்பையும் ஏற்க வேண்டும்'' என்றான்.

கனகநாதரும் ''இன்று உங்கள் வீட்டில் என்ன விசேஷம்?'' என்று கேட்கவே வையாபுரியும் ''நான் ஒவ்வொரு மாதப் பௌர்ணமியன்று யாராவது ஒரு பிரமுகருக்கு விருந்தளித்து அன்பளிப்பு அளிப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். இதற்காக அரசாங்கம் எனக்கு 'தானசிகாமணி' என்ற பட்டத்தையும் அளித்துள்ளது. இம்முறை இலக்கிய மேதையான தங்களை கௌரவிக்க எண்ணுகிறேன்''

நன்றாகத்தான் இருக்கிறது. அவரது விருந்தைத் தவிர்க்கவே அப்படி ஒரு பொய்யைக் கூறினேன்'' என்று சிவநேசனிடம் கூறினார். அவன் ஏதோ கேட்க நினைத்த போது பண்ணையார் பரமானந்தம் வந்து கனகநாதரை வணங்கினார். அவர் நகரில் பலவித வியாபாரங்களை செய்து வந்தார்.

அவர் கனகநாதரிடம் ''இன்று என் வீட்டிற்குச் சாப்பிட வர வேண்டும். இன்று என் மகன் புதிய ஆசிரியரிடம் பொருளியலைக் கற்கப் போகிறான். தாங்கள்தாம் அவனுக்கு அதைக் கற்பிக்க முடியாது என்று கூறி விட்டீர்களே. இது அவனுக்கு வியாபாரம் செய்ய உதவும் என்று எண்ணியே இந்த ஏற்பாட்டைச் செய்தேன்'' என்றார்.

என்றான்.

கனகநாதர் பலமாகச் சிரித்து "என் நெருங்கிய உறவினர் இறந்து போய் நான்கு நாட்களே ஆகின்றன. அவருக் குப் பத்தாவது நாள் ஈமச் சடங்குகள் செய்து முடிக்கப்படும் வரை நான் எந்த விழாவிலும் கலந்து கொள்ள மாட் டேன். எனவே நான் வர முடியாமல் போவதற்கு என்னை மன்னியுங்கள்" என்றார்.

வையாபுரியும் "சரி. என் அதிர்ஷ் டம் அவ்வளவுதான். நீங்கள் வர முடியவில்லை. அதனால் அடுத்த ஊர் கரகாட்டக்காரன் காளிமுத்துவை அழைத்துப் போய்ப் பரிசளிக்கிறேன்" எனக் கூறிவிட்டுச் சென்றான். வையா புரி போனதும் கனகநாதர் "யாரோ என் உறவினர் போய் விட்டார் என்று நீ கவலைப்படாதே. என் உறவினர் யாரும் இறக்கவில்லை" என்றார். சிவ நேசனுக்குத் தலையே சுழன்றது. இரு வரும் நடந்தவாறே போய் ஒரு மாந் தோப்பை அடைந்தார்கள்.

அவர்கள் அத்தோப்பிற்குள் நுழைந்த போது ஒரு குரல் "ஐயா! நானும் உங்களோடு வரலாமா?" என்று கேட்டது. அவர்கள் திரும்பிப் பார்த்த போது அழுக்கான உடைகளை அணிந்த மெலிந்த உடலோடு கூடிய ஒருவன் வந்து நின்றான்.

கனகநாதரும் "என்ன செல்லய்யா? எப்படி இருக்கிறாய்?" என்று கேட் டார். அவனும் "ஐயா! வயல் வேலை களுக்கு அடுத்த ஊரில் ஆள் தேவைப் பட்டது கேட்டு அங்கு போய் ஒரு மாத மாக அங்கே இருந்து விட்டு நேற்றுத்





தான் திரும்பி வந்தேன். இன்றைக்கு நீங்கள் என் வீட்டில்தான் சாப்பிட வேண்டும். நானே இங்கே இருந்து சாப்பாட்டு நேரத்திற்கு உங்களை என் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறேன்'' என்றான்.

கனகநாதரும் ''உன் வீடுதான் எனக்குத் தெரியுமே. நானே அங்கே வந்து சேர்கிறேன். நீ போய் வேறு ஏதாவது வேலை இருந்தால் அதைக் கவனி'' என்று அன்பு ததும்பக் கூறினார். அப்போது செல்லய்யா ''ஐயா! நான் அடுத்த ஊருக்குப் போகுமுன் உங்களைக் கண்டபோது தாங்கள் பகவத் கீதையிலிருந்து சில உபதேச மொழிகளைக் கூறினீர்கள். அதைக் கேட்டு என் மனம் எவ்வளவு நிம்மதி அடைந்தது! தாங்கள் செய்யும் பிரசங்கங்களை ஒரு மாத காலம் கேட்கும் அரிய வாய்ப்பினை இழந்து விட்டேன். அவற்றை எனக்குக் கூறி அறிவுறுத்தத் தங்களை வேண்டுகிறேன்'' என்று பணிவுடன் கேட்டான்.

கனகநாதரும் ''ஆகா! சொல்கிறேன். இப்போதே இங்கேயே சொல்கிறேன். உட்கார்'' எனவே செல்லய்யாவும் அங்கே உட்கார்ந்து கொண்டான். கனகநாதரும் அவனுக்குக் கீதையின் பல சுலோகங்களைக் கூறி அவற்றின் பொருளை விளக்கிக் கூறினார். அதன் பின் சாப்பாட்டு நேரமும் வந்து விட்டது.

அப்போது கனகநாதர் ஏதாவது சாக்கு செல்லய்யாவிடம் கூறி சாப்பிடப் போகாமல் தட்டிக் கழித்து விடுவார் என்றே சிவநேசன் எதிர்பார்த்தான். ஆனால் அவர் சிவநேசனையும் அழைத்துக் கொண்டு செல்லய்யாவின் குடிசைக்குச் சென்றார். அங்கு அவன் அளித்த எளிய உணவைத் திருப்தியுடன் வயிறு நிறைய உண்டார். அதன் பிறகு அவர் சிவநேசனை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பிச் செல்லலானார்.

வழியில் அவர் சிவநேசனிடம் ''உன் உலக ஞானம் என்னைப் பற்றி என்ன கூறுகிறது?'' என்று கேட்டார். சிவநேசன் சற்றுத் தயங்கினான். கனகநாதரோ ''தயங்காதே. பயப்படாமல் உனக்குத் தோன்றியதைச் சொல்'' என்றார். சிவநேசனும் ''தங்களுக்கு

உலக ஞானமே இல்லை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. விருந்து சாப்பாட்டையும் அன்பளிப்பையும் வேண்டாம் என்று உதறித்தள்ளிவிட்டு ஒரு குடிசைக்கு வந்து எளிய உணவை ஏற்ற உங்களை யார்தான் பாராட்டு வார்கள்?'' என்றான்.

அதுகேட்டு கனகநாதர் மிகவும் அமைதியாக ''கவிஞன் கலாதாசன் தன் காவியத்தின் பிழைகளைத் திருத் தவே விருந்தளிப்பதாகக்கூறி என்னை அழைத்தான். பண்ணையாரோ தன் மகனுக்குச் சொல்லிக் கொடுக்க ஏற் பாடு செய்த ஆசிரியரின் தகுதியை என்னைக் கொண்டு சோதித்துப் பார்க் கவே என்னைச் சாப்பிட அழைத்தார். வைர வியாபாரி வையாபுரி தன் புகழ் இன்னமும் பரவும் என்ற காரணத்தால் எனக்கு விருந்தளித்து அன்பளிப்பு அளிக்க நினைத்தான். இவர்களெல் லாம் என்னை மதித்து அழைக்க வில்லை. தம் வேலைகளைச் செய்து கொள்ள என்னை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொள்ளத்தான் நினைத் தார்கள். ஆனால் உழைக்கும் செல்லய்யா என் புலமையை மதித்து தனக்கு கீதையின் பொருளைக் கூறும் படி வேண்டினான். நான் அதைச் சொன்னதே ஒரு விருந்து சாப்பிட்டது போல உணர்ந்தேன். செல்லய்யா போன்றவர்களுடன் பேசி மகிழ்வதே விருந்துண்டதற்குச் சமம். இவனைப் போன்ற பாமரர்கள் எனக்கு உலக ஞானம் இருப்பதாகக் கருதுகிறார்கள். அது எனக்குப் போதும். பண்டிதர் களும் பணக்காரர்களும் என்னைப் பற்றி அவ்வாறு நினைக்கவில்லை என்றால் அதற்காக நான் கவலைப் படப் போவதில்லை'' என்றார்.

சிவநேசன் உடனே அவரது கால் களில் விழுந்து வணங்கி ''ஐயா! இது நான் கற்கும் முதலாவது பாடம். தங்கள் சீடனாகத் தங்களோடு இருந்து இதுபோன்ற எவ்வளவோ பாடங் களை நான் கற்க வேண்டும். எல்லாம் எனக்குத் தெரியும் என்ற அகந்தை இப்போதே என்னை விட்டு ஒழிந்தது'' என்றான்.



# நஞ்சப்பனின் நாணயம்!

பொன்னூரில் பொன்னம்பலம் என்ற பணக்காரரின் வீட்டில் நஞ்சப்பன் என்ற வேலைக்காரன் இருந்தான். அவன் அவ்வீட்டில் எல்லோருடைய வேலைகளையும் எல்லா வேலைகளையும் செய்து வந்தான். ஒருநாள் அவன் வீட்டைப் பெருக்கும் போது கீழே ஒரு வெள்ளிக் காசு கிடப்பதைக் கண்டான். அவன் அதை எடுத்துக் கொண்டு போய் பொன்னம்பலத்திடம் கொடுத்து அது கீழே கிடந்தது என்றான்.

அவரும் அவனது நாணயத்தைப் பாராட்டி "சரி, நீயே அதை வைத்துக் கொள்" என்றார். சில நாட்களாயின. ஒருநாள் பொன்னம்பலத்தின் மகள் தன் வைர மாலையைக் காணவில்லை என்று தன் தந்தையிடம் கூறினாள். அவர் வீட்டிலுள்ள எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்தார். அது கிடைக்கவில்லை.

அதன் பிறகு அவர் எல்லா வேலைக்காரர்களிடமும் விசாரித்தார். அவர் நஞ்சப்பனிடம் விசாரித்த போது அவன் "அந்த மாலை இரண்டு நாட்களுக்கு முன் எனக்குக் கிடைத்தது" என்றான். அது கேட்டுப் பொன்னம்பலம் "அப்படியானால் ஏன் அன்றே என்னிடம் கொண்டு வந்து கொடுக்கவில்லை?" என்று கடுமையாகக் கேட்டார்.

நஞ்சப்பனும் "அன்று ஒரு வெள்ளிக் காசு கிடைத்தபோது அதை உங்களிடம் கொடுத்தேன். நீங்கள் அப்போது அந்தக் காசை என்னையே வைத்துக் கொள்ளச் சொன்னீர்கள். நான் இந்த மாலையை உங்களிடம் கொடுத்தாலும் என்னையேதான் எடுத்துக் கொள்ளச் சொல்வீர்கள் என்று நினைத்து அதை நானே வைத்துக் கொண்டு விட்டேன்" என்றான்.

அதைக் கேட்டு பொன்னம்பலம் கற்சிலை போலானார்.






# 8

(ரூபதரனின் ஆட்கள் தாம் அளித்த வாக்குறுதியை நிலை நிறுத்தாமல் அவனில்லாத போது மாயாவியின் பேச்சைக் கேட்டு அத்தீவிலுள்ள ஆடு மாடுகளைக் கொன்று பக்குவப்படுத்தி உண்டார்கள். அதன் விளைவாக நடுக் கடலில் ரூபதரனின் கப்பல் மூழ்கியது. ரூபதரனைத் தவிர மற்றவர்கள் கட லுக்கு இரையானார்கள். அதன் பிறகு–)

அந்த நாட்டு மன்னன் மகாமேதி. அவனுடைய மகள் வாருணி. விடியும் வேளைக்கு அவள் ஒரு கனவைக் கண்டாள். அதில் அவளது தோழி ஒருத்தி தென்பட்டாள். அவள் "என்ன வாருணி! ஏன் இப்படிச் சோம்பேறித்தனமாக இருக்கிறாய்? துவைப்பதற்கு ஏகப்பட்ட அழுக்குத் துணிகள் உள்ளனவே. நாளையத் திருமணத்தின் போது அழுக்கான துணிகளையா அணியப் போகிறாய்? காலையானதும் துணிகளை எடுத்துக் கொண்டு வா. நானும் உன்னுடன் வந்து உனக்கு உதவுகிறேன். உன் தகப்பனாரிடம் சொல்லி ஒரு வண்டியை ஏற்பாடு செய்து கொள். ஆற்றின் படித்துறை சற்று தூரத்தில் இருப்பதால் அதுவரை நடந்து போக முடியாது" என்றாள்.

வாருணி உடனே கண் விழித்துப் பார்த்தாள். சூரியோதயம் ஆகிக்



கொண்டிருந்தது. அவள் தன் கனவின் படி நடக்கத் தீர்மானித்துத் தன் தாயாரிடம் போய்த் தான் துணிகளைத் துவைக்க ஆற்றிற்குப் போகப் போவதாகக் கூறினாள்.

அவள் தன் தந்தையைச் சந்தித்து "அப்பா, எனக்கு ஒரு பெரிய வண்டி வேண்டும். அதில் நம் அழுக்குத் துணிகளைப் போட்டுக் கொண்டு ஆற்றிற்குப் போய் அவற்றைத் துவைக்கப் போகிறேன். மலை போல அழுக்குத் துணிகள் சேர்ந்து விட்டன" என்றாள். அவளது தந்தையும் "ரொம்ப சரி. வேலையாட்களிடம் சொல்லி நல்ல வண்டியாகக் கொண்டு வரச் சொல்" என்றார்.

அவளும் அவ்வாறே கூற, சில நிமிடங்களில் கோவேறு கழுதைகள் பூட்டப்பட்ட வண்டி ஒன்று வந்து விட்டது. வாருணிக்கும் அவளுடன் செல்லும் தோழிகளுக்கும் வேண்டிய உணவும் அவ்வண்டியில் வைக்கப் பட்டது. வாருணி கையில் சாட்டையை எடுத்துக்கொண்டு தன் தோழிகளுடன் வண்டியில் உட்கார்ந்து அதை ஓட்டலானாள்.

சற்று நேரத்தில் அவர்கள் ஆற்றின் கரையை அடைந்தார்கள். வண்டியை நிறுத்தி கோவேறு கழுதைகளை அவிழ்த்து மேய விட்டு அவர்கள் அழுக்குத் துணிகளை எடுத்துப் போய் ஆற்றில் துவைக்கத் தொடங்கினார்கள். துவைத்து முடிந்ததும் அவர்கள் எல்லோரும் கடற்கரைக்குப் போய் நீராடி விட்டு வந்து ஆற்றின் கரையில் துணிகளை உலரப் போட்டார்கள்.

அதன்பிறகு அவர்கள் ஆடியும் பாடியும் பந்து விளையாடலானார்கள். பந்து ஆற்று நீரில் விழுந்து விட்டது. அதைக் கண்டு எல்லோரும் கூச்சலிட்டார்கள். அது ரூபதரனின் தூக்கத்தைக் கலைத்தது. அவன் தான் படுத்திருந்த இடத்திலிருந்து எழுந்து வந்து யார் கூச்சலிடுகிறார்கள் என்று பார்த்தான்.

அவன் வாருணியையும் அவளது தோழிகளையும் பார்த்தான். அவர்களும் அவனது அலங்கோல நிலையையும் அழுக்கடைந்த உடைகளையும் கண்டு பேயோ பிசாசோ எனப் பயந்து போனார்கள். ஓடி மரங்களின்

பின்னால் ஒளிந்தும் கொண்டார்கள். வாருணி மட்டும் இருந்த இடத்திலேயே கற்சிலை போல நின்றாள்.

ரூபதரன்சற்று தூரத்திலேயே நின்று அவளைப் பார்த்து ''பெண்ணே! நீ தேவ கன்னிகையா அல்லது மானிடப் பெண்ணா? நான் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்தவன். அவற்றில் எங்கும் உன் போன்ற அழகியைப் பார்த்ததே இல்லை. இப்போது என் நிலை மோசமாக உள்ளது. இருபது நாட்கள் கடலில் எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்து நேற்றுத்தான் இக்கடற்கரையை அடைந்தேன். இது எனக்குப் புதிதான நாடு. என்னைக் காப்பாற்றக் கூடியவள் நீ ஒருத்திதான். என் இந்த நிலையைக் கண்டு இரங்கி முதலில் அணிந்து கொள்ள நல்ல ஆடை கொடு. பிறகு என் ஊருக்குப் போகும் வழியைக் கூறினால் உனக்கு நான் என்றென்றும் கடன்பட்டவனாக இருப்பேன்'' என்றான்.

வாருணியும் ''ஐயா! உங்களைப் பார்த்தால் நல்ல புத்திசாலி என்று தெரிகிறது. இந்த அதிர்ஷ்டம் எல்லாம் கடவுளின் அருளால் கிடைப்பது. நீங்கள் எங்கள் நாட்டிற்கு வந்திருப்பதால் உங்களுக்குத் துணிமணிகளுக்கும் உணவிற்கும் ஒரு குறையில்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். உங்கள் நாட்டிற்குப் போகும் வழியையும் கூறுகிறேன். இது பையானியா நாடு. இதன் மன்னர் மகாமேதி. நான் அவரது மகள் வாருணி'' என்றாள்.



அதன்பின் அவள் தன் தோழிகளை அழைத்து ''பயப்படாதீர்கள். இவரை நதியில் நீராடச் செய்து நல்ல உடைகளைக் கொடுத்து உணவும் அளியுங்கள்'' என்றாள். ரூபதரன் ஆற்றில் இறங்கி உடல் அழுக்குப் போகத் தேய்த்துக் குளித்து விட்டு வந்தான். அவனுக்கு அணிந்து கொள்ள நல்ல ஆடைகளையும் அளித்தார்கள். அவற்றை அணிந்த அவன் மன்மதன் போல அழகாக விளங்கினான்.

அவன் இவ்வளவு அழகாகவா இருக்கிறான் என்று வாருணி எண்ணி ஆச்சரியப்பட்டாள். அவனைப் போன்றவன் தனக்குக் கணவனாகக் கிடைத்தால் எவ்வளவு சுகமாக இருக்கும் என எண்ணினாள். அவன் இந்நாட்டை



தாள். ஏனெனில் அவள் ஊர் பெயர் தெரியாத யாரோ ஒருவனை அழைத்து வந்து மணம் செய்து கொள்ளப் போகிறாள் என்ற புரளியைக் கிளப்பி விடுவார்களே. அதனால் ரூபதரன் தன்னோடு வராமல் அவனே அரண் மனைக்கு வந்து மன்னனைக் கண்டு விருந்தாளியாக அரண்மனையில் தங்குவதே சரியானது என அவள் எண்ணினாள்.

அவளது தோழிகள் உலர்ந்த துணி களை எடுத்து மடித்து வைக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். அப்போது வாருணி ரூபதரனிடம் "நாங்கள் சற்று நேரத்தில் கிளம்பப் போகிறோம். நீங்கள் என் வண்டியின் பின்னால் நடந்து வாருங்கள். இவ் வாறு கோட்டைத் தலைவாசல் வரை நீங்கள் வரலாம். அதற்குப் பிறகு என் பின்னால் நீங்கள் வரக்கூடாது. ஏனெனில் நாலு பேர் நாலு விதமாகப் பேசுவார்கள். நகருக்கு வெளியே ஒரு பூங்கா உள்ளது. அதில் தங்கிச் சற்று நேரம் இளைப்பாறுங்கள். அதற்குள் நான் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்து விடுவேன். நீங்கள் சற்று நேரத் திற்குப் பின் எங்கள் அரண்மனைக்கு வாருங்கள். நீங்கள் யாரிடமும் எதுவும் பேசாமல் நேராக உள்ளே சென்றால் என் தாய் தந்தையரைக் காண்பீர்கள். நீங்கள் சற்றும் தயங்காமல் என் தாயாரை அணுகி நல்லவிதமாக பேசி அவரது விருந்தாளியாக வந்திருப்ப தாகக் கூறுங்கள். உங்களை என் தாயா

விட்டுப் போய் விடக்கூடாது என்றும் அவள் விரும்பினாள்.

அவளது தோழிகள் ரூபதரனுக்கு உண்ண உணவு அளித்தார்கள். அவ னும் அதனை மிக ஆவலுடன் உண் டான். ஏனெனில் அவன் உணவைக் கண்டே பல நாட்களாயிற்றே. வாருணியும் ரூபதரனைப் பார்த்த வாறே ஆழ்ந்து யோசிக்கலானாள். அவள் விவாக வயதை அடைந்து விட்டவளே. அவளை மணக்க பல அழகிய வாலிபர்கள் முன் வந்தனர். ஆனால் அவர்களை எல்லாம் அவள் நிராகரித்து விட்டாள்.

இந்நிலையில் அவள் ரூபதரனைத் தன்னோடு நகருக்கு அழைத்துச் செல் வது சரியல்ல என்று அவள் நினைத்

ருக்குப் பிடித்துப் போய் விட்டால் எல்லாம் நல்லவிதமாகவே நடக்கும்'' என்றாள்.

இவ்வாறு வாருணி ரூபதரனிடம் கூறிவிட்டு வண்டியில் அமர்ந்து சென்றாள். ரூபதரன் அந்த வண்டியைப் பின் தொடர்ந்து சென்றான். கோட்டை வாசலைக் கடந்ததும் அவன் வாருணி குறிப்பிட்ட பூங்காவிற்குப் போய் சற்று நேரம் இளைப்பாறினான். வாருணியும் அவளது தோழிகளும் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது சூரியன் மறையும் வேளை. ரூபதரன் தன் இஷ்ட தேவதையான புத்திமதியை தியானித்து விட்டு அங்கிருந்து கிளம்பி அரண்மனைக்குச் சென்றான்.



வாருணி அரண்மனையை அடைந்ததும் அவளது ஐந்து சநோதரர்கள் வந்து துணிகளை எல்லாம் எடுத்துக் கொண்டு உள்ளே சென்றார்கள். இதற்குச் சற்று நேரத்திற்குப் பின் ரூபதரன் வாருணியின் அரண்மனை எங்கே இருக்கிறது என்று ஒரு சிறுமியிடம் கேட்டு ''நான் அயல் நாட்டவன். நான் அரண்மனையில் மன்னனின் விருந்தாளியாகத் தங்க நினைக்கிறேன்'' என்றான்.

அச்சிறுமியும் ''நான் அதைக் காட்டுகிறேன். ஆனால் நீங்கள் அயல் நாட்டவர் என்பதை யாரிடமும் கூறாதீர்கள். எவரிடமும் பேசாதீர்கள்'' என்றாள். அவள் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டாள். அரண்மனை ஒளிமயமாய் அழகாய் இருந்தது. முதலில் உள்ளே போக அவன் தயங்கினானாலும் சமாளித்துக் கொண்டு துணிச்சலுடன் உள்ளே நுழைந்து விட்டான்.

உள்ளே விசாலமான மண்டபத்தில் நகரப் பிரமுகர்களெல்லாம் அமர்ந்திருந்தனர். அவர்கள் விருந்துண்ணத் தயராக இருந்தார்கள். ரூபதரன் மெதுவாக நடந்து அரசனும் அரசியும் இருந்த இடத்தை அடைந்தான். அவன் அரசியின் முன் நின்று ''மகாராணியாரே! நான் அதிர்ஷ்டமே இல்லாதவன். அகதியாக உங்களிடம் அடைக்கலம் கேட்டு வந்திருக்கிறேன். நீங்களும் உங்கள் குடும்பமும் நீண்ட காலம் நன்கு வாழ இறைவன் அருள்



புரிவாராக. நான் என் நாட்டிற்குத் திரும்பிச் செல்ல நீங்கள்தான் துணை புரிய வேண்டும்'' என்று பணிவுடன் வேண்டினான்.

அவன் இவ்வாறு கூறியதைக் கேட்டு வாருணியின் சகோதரர்கள் திடுக்கிட்டுப் போனார்கள். ஒரு கிழவரோ மன்னனிடம் ''அரசே! இவர் நம் விருந்தாளி. இவரை மரியாதையுடன் வரவேற்று நம்மோடு விருந்துண்ணச் சொல்லுங்கள்'' என்றான்.

மன்னன் எழுந்து போய் ரூபதரனின் கைகளைப் பற்றி அழைத்து வந்து தன்னருகே உட்கார வைத்துக் கொண்டான். ரூபதரனுக்காக மன்னனின் மூத்த மகன் தான் உட்கார்ந்திருந்த இடத்தைக் கொடுத்து விட்டு வேறு இடத்திற்குப் போய் அமர்ந்து கொண்டான்.

சாப்பாடு முடிந்ததும் மகாமேதி மன்னன் எல்லோரையும் பார்த்து ''நீங்களெல்லோரும் உண்ட களைப்பில் இருப்பதால் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நாளைக் காலையில் நம் விருந்தினரைக் களிப்பிக்கலாம். அதற்குப் பின் அவரை அவரது நாட்டிற்கு அனுப்பி வைப்பது பற்றி யோசிக்கலாம்'' என்றான்.

அதைக் கேட்ட ரூபதரன் ''அரசே! பல கஷ்டங்களை அனுபவித்த என்னைப் போலக் கஷ்டப்பட்டவன் யாருமே இருக்க முடியாது. எனவே நீங்களாவது என் கஷ்டங்களுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து எனக்கு சுகமளியுங்கள். என் ஒரே ஆசை என் நாட்டையும் என் உறவினர்களையும் பார்த்து விட்டு இறக்க வேண்டும் என்பதுதான்'' என்றான்.

அதைக் கேட்டு எல்லோருமே ரூபதரனிடம் இரக்கம் கொண்டனர். எல்லோரும் படுத்து உறங்கச் சென்று விட்டனர். அரசனும் அரசியும் ரூபதரனும் மட்டுமே எஞ்சி இருந்தனர். ராணி ரூபதரனை நன்கு பார்த்தாள். அவன் அணிந்திருந்த ஆடைகள் தான் தைத்தவையே என்பது அவளுக்குத் தெரிந்து விட்டது.

அவள் அவனிடம் ''தம்பீ! உன்னிடம் முதலாவது கேள்வியை நான் கேட்கிறேன். நீ யார்? எங்கிருந்து வந்தாய்? இந்த ஆடைகளை உனக்கு யார் கொடுத்

தார்கள்? நீ கடற்கரையில் அலைகளால் ஒதுக்கப்பட்டவன் என்றுதானே கூறினாய்?'' என்று கேட்டாள்.

தான் சம்மோகினியிடமிருந்து தப்பி அந்த நாட்டிற்கு வந்து சேர்ந்தது வரை தான் பட்ட கஷ்டங்களையும், தன் அனுபவங்களையும் ரூபதரன் அவர்களிடம் விவரமாகக் கூறினான். அந்நாட்டுக் கடற்கரைக்கு வந்தபின் வாருணியைச் சந்தித்து அவளிடம் தன் நிலைமையை விளக்கவே அவள் தனக்கு உடைகளையும் உணவையும் கொடுத்ததை ஒளிவு மறைவு இல்லாமல் அவர்களிடம் சொன்னான்.

அதை எல்லாம் கேட்டபின் மகாமேதி ''ஐயா! என் மகள் பெரும் தவறு செய்து விட்டாள். அவள் உங்களைத் தனியே வரச் சொல்லாமல் தன்னுடனேயே இங்கு அழைத்து வந்திருக்க வேண்டும்'' என்றான். ரூபதரனோ ''இதில் அவள் செய்த தவறு எதுவும் இல்லை. அவள் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்வதாகக் கூறினாள். நான்தான் மக்கள் என்ன நினைப்பார்களோ என்று பயந்து மறுத்து விட்டேன்'' என்றான்.

மன்னன் ''நீங்கள் என் மகளை மணந்து கொண்டு இங்கேயே இருப்பதாகக் கூறினாலும் நான் மறுத்த விடமாட்டேன். நீங்கள் இப்படி வீணாக பயப்பட்டிருக்க வேண்டாம். இன்றிரவு நன்கு படுத்து உறங்குங்கள். நாளை உங்கள் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்து நீங்கள் பத்திரமாக உங்கள் நாட்டைச் சேரும்படிச் செய்கிறேன். என் கப்பல்களைப் போல உயர்ந்ததும் என் மாமிகளைப் போன்ற திறமைசாலிகளும் இவ்வுலகிலேயே இல்லை'' என்றான்.

அவர்கள் அவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் ராணி ரூபதரன் படுத்துத் தூங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தாள். ரூபதரனும் தான் அதுவரை பட்ட கஷ்டங்களை எல்லாம் மறந்து அந்தப் படுக்கையில் படுத்துச் சுகமாகத் தூங்கலானான்.

—(தொடரும்)



# எனக்கு உதவவில்லை!

கோடை காலத்தில் கொடியூர் குப்பம் ஒன்றில் ஒரு குடிசையில் தீப்பற்றிக் கொள்ளவே, தீயை அணைக்க எல்லோரும் ஓடித் தண்ணீர் எடுத்து வந்து அக்குடிசை மீது கொட்டிக் கொண்டிருந்தனர். ஆனால் ரங்கன் என்பவன் ஒரு மரத்தடியே உட்கார்ந்து தெம் மாங்கு பாடிக் கொண்டிருந்தான்.

அதைக்கண்ட லிங்கன் ''ரங்கா! உன் குடிசைக்குப் பக்கத்துக் குடிசை தீப்பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. எல்லோரும் தீயை அணைக்க அங்கும் இங்கும் ஓடித் தண்ணீர் கொண்டு வந்து கொட்டிக் கொண்டிருக்கிறார்கள். நீயோ இங்கே உட்கார்ந்து கொண்டு கவலைப்படாமல் பாடிக் கொண்டிருக்கிறாயே. நீயும் ஓடிப் போய் உதவி செய்யக்கூடாதா?'' என்று கேட்டான்.

அதற்கு ரங்கன் ''அவர்கள் ஒன்றும் எனக்கு உதவவில்லை'' எனவே லிங்கன் ''உதவ வில்லையா? உன் குடிசைக்கு அடுத்த குடிசையில் தீப்பற்ற, அது உன் குடிசைக்குப் பரவாமல் இருக்கத்தானே தீயை அணைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது உனக்கு உதவி செய்வதே'' என்றான்.

ரங்கனோ ''இல்லை. அவர்கள் எனக்கு உதவி செய்யவில்லை. எங்கேயாவது தீ தம் குடிசைகளுக்குப் பரவிவிடப் போகிறதே என்று பயந்துதான் அவர்கள் தமக்குத் தாமே உதவி செய்து கொண்டிருக்கிறார்கள்'' என்றான்.





# கற்பனைக் காரிகை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுராத்திரியில் நீ இப்படிப் பாடுபடு வதைப் பார்த்தால் நீ இந்த உல கிலேயே காண முடியாத ஏதோ ஒரு பொருளைக் கற்பனை செய்து கொண்டு அதற்காக அலைந்து திரி கிறாயோ என்ற சந்தேகம் ஏற்படு கிறது. இதுபோல சுற்றிய பானுசிம் மன் என்பவனின் கதையைக் கூறு கிறேன் கவனமாக கேள்'' எனக் கூறிக் கதையை ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் ஒரு நாட்டில் அரச குடும்பத்தில் பிறந்த பானுசிம்மன் என்ற இளைஞன் இருந் தான். அவனிடம் ஏராளமான பணத்

வேதாளம் சொல்லும் கதை



பானுசிம்மன் துணிவுடன் அங்கு சென்றான்.

அந்தக்குளம் ஒரு கந்தர்வ மன்னனின் அதிகாரத்தின் கீழ் இருந்தது. அவனது புதல்விகள் அதில் நீராடி விளையாட அவ்வப்போது வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவ்வாறு வந்தவர்களில் ரத்தினமாலா என்ற கந்தர்வக் கன்னிகை பானுசிம்மனின் பார்வையில் பட்டாள். அவளைக் கண்டதும் அவன் அவளே தான் தான் கற்பனை செய்து வைத்திருந்த காரிகை எனக் கண்டான். அவன் தன் விருப்பத்தை அவளிடம் சொல்ல நினைக்கையில் அவள் மாயமாய் மறைந்து போனாள்.

இதனால் பானுசிம்மன் மனம் தளர்ந்து விடாமல் அடுத்த பௌர்ணமி வரை அவளது வருகைக்காக அங்கேயே காத்திருந்தான். இம்முறை மறைந்திருந்து அவள் வந்ததும் ஓடி வந்து அவள் கையைப் பலமாகப் பற்றிக் கொண்டான். அவளோ சற்று சிரமப்பட்டுத் தன் கையை அவனது பிடிப்பிலிருந்து விடுவித்துக்கொண்டு மாயமாய் மறைந்து போனாள்.

அவள் குளத்தில் குதித்து மறைந்ததால் பானுசிம்மனும் அக்குளத்தில் குதிக்கப் போனான். அப்போது கந்தர்வ மன்னன் கம்பீரமான குரலில் 'நில்' எனக் கூறி ஒரே தோற்றமுள்ள மூன்று கந்தர்வக்கன்னிகளோடு வந்து ''இவர்களில் நீ விரும்பியது யாரை என்று சரியாக அடையாளம் காட்டி

தோடு அழகும் நிறைந்திருந்தது அவனுக்குப் பெண்ணைக்கொடுக்க பலர் வந்தார்கள். ஆனால் அவனுக்கு எந்தப் பெண்ணையுமே பிடிக்கவில்லை அதற்குக்காரணம் அவன்தன் மனதில் அழகிய பெண் ஒருத்தியைக் கற்பனை செய்து வைத்திருந்ததேயாகும். அப்படிப்பட்ட அழகியை அவன் தேடித் திரியலானான்.

விந்தியமலைப் பகுதியில் ஓரிடத்திலுள்ள குளத்திற்கு ஒவ்வொரு பௌர்ணமியின் போதும் பல கந்தர்வக் கன்னிகைகள் வருவதாக பானுசிம்மன் கேள்விப்பட்டான். அப்பகுதிக்குச்செல்லும்வழியில் பல கொடிய மிருகங்கள்இருந்ததால் யாரும்அங்கே போகத் துணிவு கொள்ளவில்லை

னால் அவளை நான் உனக்கு மணம் செய்து வைக்கிறேன்'' என்றான்.

பானுசிம்மன் முதலில் சற்றுத் திகைத்தாலும் பிறகு அவனுக்குத்தான் ரத்தினமாலாவின் கையைப் பற்றியதும் அவள் சற்றுப் போராடி அக் கையை விடுவித்துக் கொண்டதும் நினைவிற்கு வந்தது. அவளது கையில் தன் நகங்களால் உண்டாக்கப்பட்ட கீறல்கள் இருக்க வேண்டும் என எண்ணி அவன் அவர்களது கைகளைப் பார்த்தான். அவன் எதிர்ப்பார்த்தபடி ஒருத்தியின் கையில் கீறல்கள் இருந்தன. உடனே அவன் அவள்தான் தான் விரும்பிய பெண்ணென்று கந்தர்வ மன்னனுக்குச் சுட்டிக்காட்டினான்.

கந்தர்வ மன்னனும் மகிழ்ந்து ''பேஷ். சரியாகத்தான் காட்டி இருக்கிறாய். ரத்தினமாலாவுக்கும் உன்னைப் பிடித்திருக்கிறது. ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில்தான் இந்த விவாகம் நடக்கும். பொறுப்பது எங்கள் குணம். நீயும் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். நீ கோபித்துக் கொண்டு அவளை மூன்று தடவைகளில் அடித்தால் அவள் மறுபடியும் கந்தர்வலோகத்திற்கே வந்து விடுவாள். இதை நினைவில் வைத்துக் கொள்'' என்று கூறி ரத்தினமாலாவை அங்கேயே விட்டு விட்டு தன் மற்ற இரு புதல்விகளுடன் அவன் மாயமாய் மறைந்து போனான்.

பானுசிம்மன் அப்போதே ரத்தினமாலாவை காந்தர்வ விவாகம் செய்து



கொண்டு தன் ஊருக்கு அழைத்துச் சென்றான். சில நாட்களுக்குப்பின் பானுசிம்மன் ரத்தினமாலாவை அழைத்துக்கொண்டு தன் நண்பன் ஒருவனின் வீட்டிற்குப் போகவேண்டி வந்தது. அந்த நண்பனுக்குக் குழந்தை பிறக்கவே அதற்குப் புண்ணியாவசனம் அன்று நடக்க இருந்தது. குழந்தையைத் தொட்டிலில் போட்டிருந்தார்கள். பானுசிம்மன் அக்குழந்தையை எடுத்து முத்தமிட்டு விட்டுத் தான் கொண்டு வந்த பரிசை அளித்தான். பிறகு அக்குழந்தையைத் தன் மனைவியிடம் கொடுக்க முயன்றான்.

ஆனால் ரத்தினமாலா அதனைத் தன் கைகளில் எடுத்துக் கொள்ளாமல் சட்டென முகத்தைத் திருப்பிக்



கொண்டு வேறுபுறமாகப் போய் நின்றாள். அதுக்கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். வீடு திரும்பிய தும் பானுசிம்மன் தன் மனைவியைக் கோபித்துக் கொண்டான்.

அவள் ''நான் அப்படி நடக்கக்கார ணம் உள்ளது'' எனத் தலை நிமிர்ந்து கூறவே பானுசிம்மன் கோபம் கொண்டு அவள் கன்னத்தில் ஒரு அறை அறைந்து ''இதுதான் நீ நடந்து கொள்ளும் விதமோ?'' எனக் கேட் டான். அவ்ள் தழுதழுத்த கரலில் ''அக்குழந்தையின் எதிர்காலம் பற்றி நீங்கள் அறிய மாட்டீர்கள் ஆனால் எனக்குத்தெரிந்து விட்டது. அவன் பெரியவனானால் கெட்ட வழிகளில் போய்ப் பல கொலைகளைச் செய் வான். முடிவில் அவன் தூக்கிலிடப் படுவான். அப்படிப்பட்டவனை நான் தொடக்கூட மாட்டேன். நீங்கள் என்னை அடித்து விட்டீர்கள். இது முதல் தடவை என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

பானுசிம்மனுக்குத்தன் தவறு தெரிந்தது. அது முதல் தன் மனைவி மீது கோபப்படாமல் ஜாக்கிரதையாக இருக்காலானான். சிலநாட்களாயின. அவ்வூர் கிராம அதிகாரியின் மகளின் திருமணத்திற்கு அவனும் அவன் மனைவியும் போக வேண்டி வந்தது. அவர்கள் அங்குபோகும் போது மண மகன் மணமகளின் கழுத்தில் திரு மாங்கல்யத்தைக் கட்டப் போனான். எல்லோரும் அக்காட்சியைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஆனால் ரத்தினமாலாவோ பலத்த குரலில் அழலானாள். எல்லோரும் திடுக்கிட்டு அவளையே பார்க்கலா னார்கள். பானுசிம்மனும் தன் மனைவியிடம் ''ஏன் இப்படி அழு கிறாய்? என்ன நடந்து விட்டது?'' என்று கேட்டான். அதற்கு அவள் ''இவர்களது ஜோடிப் பொருத்தம் சரியில்லை. இவர்கள் இனி தினமும் சண்டை போட்டுக் கொண்டே இருப் பார்கள். அதனால் இவர்கள் இருவரது வாழ்க்கையும் பாழாகப் போகிறது'' என்றாள். அதைக் கேட்டு பானுசிம் மன் ''சரிசரி கண்ணைத் துடைத்துக் கொண்டு பேசாமல் இரு'' என்றான்.

அப்போது யாரோ ஒருவன் ''மனை



வியை அடக்கத் தெரியாதவனெல்லாம் இப்படி நாலுபேர் முன் வந்து அவமானப்படத்தான் வேண்டும்'' என்று சற்று பலமாகக்கூறினான். அது கேட்டு பானுசிம்மன் ரத்தினமாலாவின் முதுகில் ஒரு குத்துவிட்டு மானத்தை வாங்காதே'' என்றான். ரத்தினமாலாவோ ''என்னை அடிப்பது இது இரண்டாவது தடவை'' என்றாள்.

இதற்குப்பின் பானுசிம்மன் தன் மனைவி விஷயத்தில் எச்சரிகையுடன் நடக்கலானான். ஏனெனில் இன்னும் ஒருமுறை அவளை அடித்து விட்டால் அவள் கந்தர்வலோகத்திற்கு போய் விடுவாளே. சில நாட்களாயின பானுசிம்மனின் சிற்றப்பாவின் மகன் இறந்து விட்டதாக்த் தகவல் வரவே உடனே அவன் தன் மனைவியுடன் தன் சிற்றப்பாவின் வீட்டிற்குச்சென்றான். அங்கு எல்லோரும் இறந்து கிடந்த வாலிபனின் உடலைச் சுற்றிநின்று அழுது கொண்டிருந்தார்கள்.

அந்த உடலைக் கண்டு ரத்தின மாலா பலமாகச் சிரிக்கலானாள். எல்லோரும் அவளை விசித்திரமாகப் பார்த்தார்கள். பானுசிம்மனும் அவளிடம் ''இறந்துகிடப்பவனைப் பார்த்து நீ இப்படி சிரிக்கக்கூடாது. நீயேபார் எல்லோரும் அழுது கொண்டிருக்கிறார்கள்'' என்றான். அப்போதும் அவள் சிரிப்பதை நிறுத்தவில்லை. அது கண்டு கோபம் கொண்டு பானுசிம்மன் அவள் கன்னத்தில் அறைந்து விட்டான். ஆனால் ரத்தினமாலா ''இறந்தவன் மகா அதிர்ஷ்டசாலி. இப்போது மறுபிறவி எடுத்து ஒரு சக்கரவர்த்தியின் மகனாகப் பிறந்திருக்கிறான். இதை அறியாமல் எல்லோரும் அழுகிறார்களே என்பதை நினைக்க நினைக்க எனக்கு சிரிப்பு அடக்க முடியாமல் வந்துவிட்டது. இது இருக்கட்டும் என்னை மூன்று தடவைகளில் நீ அடித்துவிட்டதால் இனி நான் உன்னோடு வாழ முடியாது. இப்போதே கந்தர்வலோகம் போகிறேன்'' எனக்கூறி மாயமாய் மறைந்தாள். பானுசிம்மனும் அவளைத் தடுக்காமல் பேசாமல் நின்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னா! பானுசிம்மன் கந்தர்வ மன்னன் விதித்த நிபந்தனையை ஏன்

மீறினான்? ரத்தினமாலா கந்தர்வ லோகத்திற்குப் போகும் போது ஏன் அவன் தடுத்து அவளை நிறுத்த வில்லை? இக்கேள்விகளுக்குச் சரி யான பதில் தெரிந்திருந்தும் நீ அவற்றைக்கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

அதற்கு விக்கிரமனும் ''மனிதப் பிறவி எடுத்தவனுக்கும் கந்தர்வ கன்னிக்கும் திருமணம் நடப்பது சரியல்ல. அது ஒரு திருமணம் என்றே ஆகாது. இருவரிடையே என்னதான் அன்பு இருந்தாலும் மனிதனின் இயல்பே வேறு. கந்தர்வர்களின் இயல்பே வேறு. பானுசிம்மனால் ரத்தினமாலாவை மனித இயல்பு கொண்டவளாகச் ஆக்கமுடியாது. அவர்களது போக்கு நேர் விரோத மானது என்பது அவர்களது நடத்தை யில் வெளிப்பட்டு விட்டது. மனித னுக்கு சமுதாய வாழ்க்கை உள்ளது. சமூகத்திற்கு அவன் செய்ய வேண்டிய நெறி முறைகள் வகுக்கப்பட்டிருக் கின்றன. அவற்றைச்சரிவரச்செய்ய வேண்டுமென்றுதான் பானுசிம்மன் எண்ணினானேயொழியதான்கந்தர்வ மன்னன் விதித்த நிபந்தனையை ஏற்றதைப் பற்றி நினைக்கவில்லை. ரத்தினமாலாவோ கந்தர்வர்களுக் குள்ள சக்தியால் மனிதர்களின் எதிர் காலம் பற்றி அறிந்து அதற்கேற்ப நடந்தாள். அதனால் மனிதர்களை அவளது நடத்தை எவ்வாறு பாதிக்கும் என்பது பற்றி அவள் கவலைப்பட வில்லை. இந்த நேர்எதிரான இயல்பு களைக் கொண்டு இருவரும் இல் வாழ்க்கை நடத்த முடியாது என்பதை பானுசிம்மன் கண்டு கொண்டான். அதனால் தான் ரத்தினமாலா கந்தர்வ லோகத்திற்கு போவதை அவன் தடுக்கவில்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த் பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன்சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# மானிடப் பிறவியே மேல்!

குருசாமி கோமதியை மணந்து கொண்டு ஊருக்கு வந்தான். குருசாமி சாதாரணப்பட்ட குடும்பத்தில் பிறந்தவன். கோமதி அவனை விடச் சற்று வசதியான குடும்பத்தில் பிறந்தவள். குருசாமி குடித்தனம் போட்டதும் கோமதி அக்கம்பக்கத்துப் பணக்கார வீட்டுப் பெண்களைப் பார்த்து விட்டு அவர்களுக்கு இருப்பது போலவே தனக்கும் சரிகைப் பட்டுப் புடவைகளும் தங்க நகைகளும் வேண்டுமென்று தன் கணவனிடம் தினமும் நச்சரிக்கலானாள்.

ஒரு ஜமீன்தாரரிடம் சாதாரண குமாஸ்தாவாக வேலை பார்க்கும் குருசாமி இதற்கெல்லாம் எங்கே போவான்? மனைவியின் நச்சரிப்பு அவனைக்கவலையில் ஆழ்த்தியது. அதனால் அவனால் தன் வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை. அதனால்ஜமீன்தாரர் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டார்

வேலையை இழந்த குருசாமி என்ன செய்வதென்று திகைத்துப் போனான். அப்போது அவ்வூருக்கு நித்தியானந்தர் என்ற யோகி வரவே, அவரை அவன் கண்டு தன் மனைவியால் தனக்கு ஏற்படும் பிரச்சனைகளைக் கூறினான்.

யோகியும் ''சரி, நீ என்ன விரும்புகிறாய்?'' என்று கேட்கவே அவனும் ''சுவாமி! இந்த மானிடப்பிறவியை விட்டு வேறு ஏதாவது பிறவி எடுத்தால் சுகப்படலாம் என்று நினைக்கிறேன்.'' என்றான் யோகியும் ''சரி, நீ என்ன பிறவி எடுத்தால் சுகப்படுவாயென்று சொல். அதுவரை நீ நினைக்கும் பிறவிளிலுள்ள நன்மை தீமைகளை எல்லாம் உன் கண்முன் தோன்றச் செய்கிறேன்'' என்றார்

குருசாமியும் அப்படியே செய்வதாகக் கூறிவிட்டுச் சுற்றிலும் பார்த்தான்.

—ராஜலட்சுமி ரவி—

அப்போது அவனெதிரே இருந்த பவளமல்லி மரம் காற்றில் அசைந்து மலர்களை உதிர்த்தது. அதிலிருந்து நறுமணம் வீசவே அவன் அந்த மலராக ஆகிவிடலாமா என்று நினைத்தான். அவன் கண்ணை மூடிக் கொண்டு அதன் நன்மை தீமைகளைப் பற்றி நினைத்தான். மலர் மாலையாகிச் சற்று நேரத்தில் வாடி வதங்குவதைக் கண்டு அவன் அம்மாதிரி மலராகும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டுச் சுற்றிலும் பார்த்தான்.

ஒரு மரத்தின் மீது ஒரு புறாவைக் கண்டு அவன் தானும் அது போலாகி விடலாமா என நினைத்து கண்களை மூடிக் கொண்டான். ஆகாயத்தில் பறக்கும் அதனை நோக்கி சிலர் அம்பு எய்வது கண்டு அந்த எண்ணத்தையும் கைவிட்டான்.

சற்று தூரத்தில் ஒரு ஆடு துள்ளி ஓடுவது கண்டு அவன் அது போல் ஆகி விடலாமா என நினைத்து அதன் நன்மை தீமைகளைக் காணக் கண்களை மூடிக் கொண்டான். அழகான அந்த ஆட்டை ஒரு கசாப்புக் கடைக்காரன் இழுத்துக் கொண்டு போய்த் தன் கையிலிருந்த கொடுவாளால் வெட்டுவதைக் கண்டான்.

இக்காட்சிகளை எல்லாம் கண்ட அவன் யோகியிடம் ''எந்தப் பிறவியிலும் கஷ்டம் இருக்கத்தான் இருக்கிறது. நான் மனிதனாகவே இருந்து விட்டுப் போகிறேன். என் மனைவி கடுஞ்சொற்களைத்தானே கூறுகிறாள். அதனைச் சகித்துக் கொண்டு பேசாமல் இருந்து விடுகிறேன்'' என்றான்.

யோகியும் ''பேஷ்! நீ மனிதனாகவே இருந்து கஷ்டங்களைச் சமாளிப்பதாகக் கூறியதைப் பாராட்டுகிறேன். நீ உன் மனைவியின் போக்கையும் மாற்ற முயற்சிச் செய். கண்டிப்பாக அவள் திருந்தி உன் வழிக்கு வருவாள். அதனால் உன் குடும்ப வாழ்க்கையும் சுகமாக அமையும்'' என்று ஆசிகள் கூறினார்.

குருசாமியும் மனத்தெளிவு பெற்றவனாய் மனநிறைவுடன் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தான்!



# பம்பாயின் சுற்றுப்புறம்

கருத்து: **மீராநாயர்**
ஓவியர்: **கௌதம் சென்**



**இங்கிலாந்தின் இரண்டாவது சார்லஸ்**



**போர்த்துக்கீசிய இளவரசி காதரின் டா பிகான்ஜா**

ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன் போர்த்துக்கிசியர் இந்தியாவிற்கு வந்தபோது இப்போது மும்பையாக உள்ள ஏழு தீவுகள் அப்போது முக்கியமற்ற சிறு மீனவர் கிராமங்களாக இருந்தன. இவற்றில் மும்பயி என்ற தீவு இங்கிலாந்து மன்னர் இரண்டாவது சார்லஸ் போர்த்துக்கீசிய இளவரசி காதரீன் டா பிரகான்ஜாவை மணந்தபோது சீர்தன மாக இங்கிலாந்திற்கு அளிக்கப்பட்டது. பிறகு மற்ற ஆறு தீவுகளையும் போர்த்துக்கீசியர் ஆங்கிலேயருக்கு கொடுத்து விட்டனர். பின்னர் பல ஆண்டுகளில் இத்தீவுகள் இணைக்கப்பட்டு இந்தியாவின் வணிக மையமான பம்பாய் ஆகியது.



**பம்பாயின் ஏழு தீவுகள்**

பம்பாயின் கடற்கரை நீளம் 64 கி.மீ. வடமேற்கில் மீனவர் கிராமம் வெர்சோவா உள்ளது. இங்கு கோலிகள் என்ற பழங்குடி மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களே பம்பாயின் முதல் குடி மக்கள். கோலி ஆண்கள் மீன் பிடித்து வர, கோலிப் பெண்கள் அவற்றை விற்கிறார்கள். மோசபில் என்ற ஒருவகை மீனை பம்பாய் வாசிகள் விரும்பி உண்கிறார்கள்.

வெர்சோவிலிருந்து இரு கிலோ மீட்டர் தொலைவில் பம்பாயின் பிரபல ஜுஹு கடற்கரை உள்ளது. இக்கடற்கரையில் பேல்பூரி போன்ற ருசிகரத் தின்பண்டங்களை விற்கும் பல சிறுகடைகள் உள்ளன.

ஜே.ஆர்.டி. டாட்டா 1932ல் தன் ஆகாய விமானமான புஸ் மோத் என்பதை இந்த ஜுஹு கடற்கரையில்தான் இறங்கினார்.



**டாடாவின் ஆகாய விமானம் புஸ்மோத்**



**ஜே.ஆர்.டி. டாடா**

இதிலிருந்துதான் நம் நாட்டின் 'ஏர் இந்தியா' விமானங்கள் ஆரம்பமாகின.



***மவுண்ட் மேரியின் பாசிலிகா***

கடற்கரையின் தெற்கே பாண்ட்ரா குன்றில் மவுண்ட் மேரியின் பாசிலிகா சர்ச்சைக் காணலாம். 1640ல் போர்த்துக்கீசியர் இதனைக் கட்டினார்கள். செப்டம்பர் மாத விழாவில் எல்லா மதத்தினரும் இங்குள்ள கன்னி மேரிக்கு மெழுகு வத்திகளை ஏற்றி வைக்கிறார்கள்.

எட்டு நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட ஹாஜி அலி தர்கா ஓர்லியில் உள்ளது. கடல் அலை அதிகம் அடிக்காத நாட்களில்தான் இங்கு செல்ல முடியும். இங்கு பீர்ஹாஜி அலி ஹஜ்ரத் புகாரியின் கல்லறை உள்ளது. இவர் தாம் மெக்காவிற்குப் போகுமுன் தம் செல்வத்தை எல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்து விட்டுப் போனாராம். அங்கிருந்து திரும்பி வந்ததும் இத்தீவில் ஒரு பாறை மீது வாழ்ந்து ஆண்டவனை வழி பட்டு வந்தாராம். அவரது சீடர்கள் அவர் இறந்தபின் இந்தக் கல்லறையைக் கட்டினார்கள்.

***ஹாஜி அலி தர்கா***

மலபார் ஹில்ஸின் கீழுள்ள சௌபாத்தி கடற்கரையும் ஜுஹுவைப் போல் பெயர் பெற்றதே. நூறு வருடங்களுக்கு முன் சிவ்கர் பாபு ஜீதால்பாடே இங்கு தம் விமானத்தை இறக்கினாராம். இது ரைட் சகோதரர்களின் விமான ஓட்டுதலுக்கு எட்டு ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்ச்சியாகும்.

சௌபாத்தி கடற்கரை விநாயக சதுர்த்தி விழாவின் போது ஒரே கூட்டமாக இருக்கும். இங்குதான் விநாயக விக்கிரகங்களைக் கடலில் போட அன்று மக்கள் திரண்டு வருகிறார்கள். இவ்விழாவை ஆரம்பித்து வைத்தவர் பாலகங்காதர திலகர். அவரது உருவச் சிலை இக் கடற்கரையில் உள்ளது.



**கடலில் கரைக்க எடுத்துச் செல்லப்படும் ஒரு விநாயக விக்கிரகம்**

விடுதலை போரில் பம்பாய் முக்கிய இடம் பெற்றது. இந்திய தேசிய காங்கிரஸ் இங்குதான் தோன்றியது. இங்குதான் 1942 ஆகஸ்ட் 8ல் 'வெள்ளையனே வெளியேறு' என்ற தீர்மானத்தை காங்கிரஸ் நிறைவேற்றியது.

பம்பாய் பங்கு மார்க்கெட் நம் நாட்டில் மிகப் பழமையானது. 1850ல் அது ஆறு தரகர்களுடன் ஒரு ஆலமரத்தடியே தொடங்கியது. 1877ல் தலால் தெருவில் பம்பாய் பங்கு மார்க்கெட் முறைப்படி தொடங்க; அதன் இப்போதைய கட்டடம் நூறு வருடங்களுக்குப் பிறகே கட்டப்பட்டது.

பம்பாய் துறைமுகம் நம் நாட்டிலேயே மிகப் பெரியது. எப்போதும் விறுவிறுப்பாக இயங்கும் இங்கு சாஸுன், பிரின்செஸ், அலெக்ஜாண்ட்ரியா, இந்திரா முதலிய துறைகள் 1870லிருந்து 1970க்குள் கட்டப்பட்டவை. ஜவஹர் நேரு துறைமுகம் இரு தீவுகளிடையே (நஹாவா–ஷேவா) அமைந்துள்ளது.

விக்டோரியா துறை ஊழியர்கள் 1944 ஏப்ரல் 14ல் பிரிட்டிஷ் கப்பல் படைக் கப்பல் எஸ்.எஸ். போர்ட் ஸ்டைகினிலிருந்து புகை வருவதைக் கண்டனர். இது ஏராளமான வெடி மருந்தையும் தங்கத்தையும் மற்ற பொருள்களையும் கராச்சியிலிருந்து ஏற்றி வந்தது. இக்கப்பல் வெடிக்க, இத்துறையிலிருந்த மற்ற 54 கப்பல்களிலும் தீப்பிடித்து வெடிக்கலாயின. இத்தீயை அணைக்க 24 என்ஜின்களும் 10,000 பணியாட்களும் பயன்படுத்தப்பட்டனர்.

பம்பாயில் பல வர்க்க மக்கள் வாழ்கிறார்கள். மராட்டியர்களைத் தவிர மற்ற மாநிலத்தவரும், அயல் நாட்டவரும் இங்கு இருக்கிறார்கள். மாஜகான் துறையருகே 180 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட க்வான்குங் ஆலயம் பம்பாயிலுள்ள சீனர்களின் ஆலயம். இங்கு ஜப்பானியர் கோவில் ஒன்றும் யூதர்கள் கோவில் ஒன்றும் உள்ளன.





பம்பாயின் பலதர மக்கள்



மகாராஷ்டிர மாநிலத் தலைநகராக பம்பாய் இருப்ப தோடு இந்திய திரைப் பட உலகில் முதலிடமும் பெற்று இந்தியாவின் ஹாலிவுட் என அழைக்கப்படுகிறது. இந்தியாவின் முதல் திரைப்படம் 1896 ஜூலை 7ல் வாட்சன் ஹோட்டலில் காட்டப்பட்டது. பம்பாயின் கோரேகாமிலும் நூற்றுக்கணக்கான திரைப் படங்கள் தயாரிக்கப்படுகின்றன.



400 ஆண்டு பழைய மணிக்கூண்டு

பம்பாயின் 'கேட் வே ஆஃப் இந்தியா' அருகே 400 ஆண்டுகளுக்கு முன் போர்த்துக்கீசியரால் கட்டப்பட்ட ஒரு மணிக் கூண்டு உள்ளது. இதில் பல சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. கடலை நோக்கியுள்ள இது கப்பல்களுக்கு மணி காட்டுகிறது.

பம்பாயின் மிகச் சிறப்பான இடம் 'கேட் வே ஆஃப் இந்தியா'! இது அராபியக் கடலை நோக்கிக் கட்டப்பட்டுள்ளது. 1911ல் ஜார்ஜ் மன்னரும், ராணி மேரியும் பம்பாய்க்கு வந்த போது அவசர அவசரமாகக் கட்டப்பட்ட இது 1927ல் புதுப்பிக்கப்பட்டது. 1947ல் நம்நாடு சுதந்திரம் அடைந்தபோது கடைசி ஆங்கிலப் போர் வீர்கள் இதன் வழியாக அவர் களது நாட்டிற்குத் திருப்பி அனுப்பப் பட்டார்கள்.



கேட் வே ஆஃப் இந்தியா



# உயர்ந்த மதிப்பு

முருகனும், செந்திலும் மணலூரில் இருக்கும் இரு நண்பர்கள். அவர்கள் அவ்வூரில் எந்த வேலை கிடைத்தாலும் அதைச் செய்து கிடைக்கும் பணத்தைக் கொண்டு எப்படியோ வாழ்ந்து வந்தார்கள். ஒருமுறை வறட்சியால் அப்பகுதி வாடவே நண்பர்களிருவரும் பட்டணத்திற்குப் போய் பணம் சம்பாதிக்க நினைத்து தம் ஊரைவிட்டுக் கிளம்பிச் சென்றார்கள்.

பட்டணத்தில் இருவருக்கும் நல்ல வேலைகள் கிடைத்தன. இருவரும் நிறையச் சம்பாதித்துச் சேர்த்தும் வைத்திருந்தார்கள். ஒரு நாள் செந்தில் தன் நண்பனிடம் ''நம் ஊருக்குப் போய் நம் அந்தஸ்து உயர்ந்ததைக் காட்டவேண்டும்'' என்றான். முருகனும் ''சரி போகலாம். ஆனால் வெறும் கையுடன் போகாமல் என் நண்பர்களுக்கும் பரிசுப் பொருள்களை வாங்கிச் செல்ல நினைக்கிறேன்'' என்றான்.

செந்தில் பதில் எதுவும் கூறவில்லை. முருகன் தன் பத்து நண்பர்களுக்குக் கொடுக்க நூறு ரூபாய்க்குள் சில பொருள்களை வாங்கி வந்தான் செந்தில் அதைப் பார்த்து விட்டு ''பட்டணத்தில் நம் அந்தஸ்து என்ன என்று நம் ஊராருக்குக் காட்ட மிக விலையுயர்ந்த பகட்டான பொருள் ஒன்றை நாம் எடுத்துச் செல்ல வேண்டும்'' என்றான்.

முருகனோ ''நான் என் அந்தஸ்திற்குத் தக்கபடி பொருள்களை வாங்கி இருக்கிறேன். இதைவிட அதிகப் பணம் என்னால் செலவு செய்ய முடியாது'' என்றான். செந்தில் முருகனை அழைத்துக் கொண்டு விலையுயர்ந்த பொருளாக வாங்கக் கடைத்தெருவுக்குச் சென்றான்.

அப்போது ஒரு துணி வியாபாரி ''இவ்வளவு பெரிய ஊரில் என் விலையுயர்ந்த நல்ல சரக்கை வாங்குவோரே

—சிவனார் செல்வன்—



இல்லையா?'' என்று கூவிக் கொண்டிருந்தான். செந்தில் அவனருகே போய் அவனது சரக்கைக் காட்டும்படிக் கேட்டான். அந்த வியாபாரியும் ஒருபட்டுச் சட்டையை எடுத்துக் காட்டி ''இதில் தங்க சரிகைகளும் வெள்ளி இழைகளும் உள்ளன. விலையுயர்ந்த முத்துக்கள் வைத்துக் தைக்கப்பட்டுள்ளன. இதற்கு தாராளமாய் பத்தாயிரம் ரூபாய் மதிப்புப் போடலாம். ஆனால் ஆயிரம் ரூபாய்க் குக் கொடுக்கிறேன்'' என்றான்.

முருகன் ''அடேயப்பா! ஒரு சட்டைக்கு விலை ஆயிரம் ரூபாயா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். ஆனால் செந்திலோ '' நான் வாங்கிக் கொள்கிறேன். விலையைக் கொஞ்சம் குறைத்துக் கொள்'' என்றான். வியாபாரியோ ஒரு பைசாக்கூடக் குறைக்க முடியாது எனக் கறாராகக் கூறவே செந்தில் தன்னிடமிருந்த தொள்ளாயிரம் ரூபாயை எடுத்து முருகனிடம் நூறு ரூபாயைக் கடன் வாங்கி மொத்தம் ஆயிரம் ரூபாயை வியாபாரியிடம் கொடுத்து விட்டு அந்தச் சட்டையை வாங்கிக் கொண்டான்.

முருகனும் ''இதை யாருக்குப் பரிசாகக் கொடுக்கப் போகிறாய்?'' என்று கேட்கவே செந்திலும் ''யாருக்கோ கொடுக்கவா இதை இவ்வளவு விலைக்கொடுத்து வாங்கினேன்? இதை நானே அணிந்து கொண்டு நம் ஊர் தெருக்களில் போவேன். அப்போது ஊரார் என் அந்தஸ்து உயர்ந்ததைக் கண்டு என்னை மதிப்பார்கள்'' என்றான்.

முருகனோ '' என்னவோ! உன் மதிப்பு உயருவது பற்றித் தெரியாது. முடிவில் இதை நீ இவ்வளவு விலை கொடுத்து வாங்கியதற்காக நீயே வருத்தப்படபோகிறாய்'' என்றான். செந்திலோ ''முருகா! பணத்தைக் கையில் வைத்துக் கொண்டு சுகம் அனுபவிக்கத் தெரியாத நீ என்னதான் பரிசுக்களைப் பிறருக்குக் கொடுத்தாலும் அவற்றால் அவர்கள் திருப்தி அடையப்போவதில்லை. உன்னையும் அவர்கள் மதிக்க மாட்டார்கள். நீ என்னைப் போல உனக்கே ஆடம்பரப் பொருள்களை வாங்கி வைத்துக் கொண்டாலே உனக்கு மதிப்பு. இதைத் தெரிந்து

கொள்'' என்று உபதேசம் செய்வது போலக் கூறினான்.

நண்பர்கள் இருவரும் மணலூருக்கு வந்தார்கள் ஆனால் செந்தில் ஊர் எல்லையிலேயே இருந்து ''நான் இந்தக் குளத்தில் குளித்து விட்டு புதுச்சட்டையை அணிந்து கொண்டு ஊருக்குள் வருகிறேன். நீ முன்னதாகப் போ'' என்று முருகனிடம் கூறினான். முருகனும் ஊருக்குள் போய் தன் நண்பர்களைக் கண்டு அவர்களுக்குத் தான் கொண்டு வந்த பரிசுகளை அளித்து நலம் விசாரித்தான். அவர்களும் மகிழ்ந்து ''செந்தில் வரவில்லையா?'' என்று கேட்டார்கள்.

முருகனும் ''பின்னாலேயே வந்து கொண்டிருக்கிறான். அவன் ஆயிரம் ரூபாய் விலை கொடுத்து ஒரு சட்டையை வாங்கி இருக்கிறான்'' என்றான். செந்தில் வந்து கொண்டிருக்கிறான் என்ற செய்தி கேட்டு ஒருசிலர் அவனை எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவனும் குளித்துவிட்டு ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிய புதுச் [illegible] அணிந்து கொண்டு தான் வந்தான்.

அவர்கள் அவனைச் சூழ்ந்துக் கொண்டு ''நீ ஏதோ நிறைய விலை கொடுத்து ஒரு புதுச்சட்டை வாங்கி இருப்பதாக முருகன் சொன்னானே எங்கே அதைக் காட்டு பார்க்கலாம்'' என்றார்கள். செந்திலும் ''பார்த்தாலே தெரியவில்லையா? நான் அணிந்திருப்பது அந்தச் சட்டைதான்'' என்றான்.

எல்லோரும் அதைப் பார்க்கையில்





அவர்களில் ஒருவன் ''இதுவா அது? ஏதோ பகல் வேஷக்காரன் போட்டுக் கொண்டு வரும் சட்டை போல அல்லவா இருக்கிறது! இதற்கா ஆயிரம் ரூபாய் கொடுத்தாய்?'' என்று கேட்டான் இன்னொருவனோ ''இவனை யாரோ நன்றாக ஏமாற்றி விட்டான்! இவன் ஏமாந்து போய் இதை வாங்கி விட்டான்'' எனக் கூறினான்.

செந்தில் அந்த சட்டை விலை உயர்ந்ததே எவ்வளவு புகழ்ந்து கூறியும் யாரும் அதை நம்பத் தயாராக இல்லை. அபபோது செந்தில் ''இந்த சட்டையை நான் ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கியபோது முருகனும் என் பக்கத்தில்தான் இருந்தான். அவனையே கேட்டுப் பாருங்கள்'' என்று அழாத குறையாகக் கூறினான்.

அவர்களும் முருகனிடம் ''நீ கூட செந்தில் இந்தச் சட்டையை வாங்கும் போது அவனோடு இருந்தாயாமே!'' என்று கேட்க முருகனும் ஆமாம் என்று ஒப்புக் கொண்டான். அதைக் கேட்ட அவர்கள்'' என்ன முருகா! நம் ஊர்க்காரன் ஒருவன் பட்டணத்துக்காரன் ஒருவனிடம் ஏமாந்து போவதை வேடிக்கை பார்த்துக் கொண்டா இருந்தாய்? இப்படியா உன் நண்பனை ஏமாற விட்டு விடுவது?'' என்று கேட்டார்கள்.

அப்போது செந்தில் ''இதில் முருகனின் தப்பு எதுவுமில்லை. நான்தான் இந்தச் சட்டை எனக்கு வேண்டும் என்று சொல்லி வாங்கிக் கொண்டேன். முருகன் முதலில் வந்து நான் வாங்கியது மிக விலையுயர்ந்த சட்டை என்று கூறியதால் நீங்கள் இது பற்றி என்னென்னவோ நினைத்துக் கொண்டு எதிர்பார்த்தீர்கள். அப்படி அவன் சொல்லாமல் இருந்திருந்தால் இதைப் பார்த்ததும் ஆச்சரியம் பட்டுப் போயிருப்பீர்கள்'' என்றான்.

அதன் பிறகு செந்தில் அந்தச் சட்டையோடு ஊர்த்தெருக்களில் சுற்றி வந்தான். எல்லோரும் அவன் நலமாயிருக்கிறானா என்று கேட்டார்கள் யாரும் அந்தச் சட்டைப்பற்றி ஒரு கேள்விக் கூட கேட்கவில்லை. அது கண்டு மனமொடிந்து போய் அவனே ஒருசிலரிடம் ''இந்தச்சட்டை எப்படி

இருக்கிறது?'' என்று கேட்டான். அவர்களும் ''பரவாயில்லை. சுமாராக இருக்கிறது என்று கூறியதோடு நிறுத்திக் கொண்டார்கள்.

மணலூரில் இரண்டு நாட்கள் இருந்து விட்டு நண்பர்கள் இருவரும் பட்டணத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். அவர்கள் புறப்படுமுன் ஊரார் முருகனிடம் ''நீ செந்திலை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள் என்று'' என்று கூறியதோடு செந்திலிடம் ''நீ முருகன் சொல்வதைக் கேட்டு நல்ல விதமாக நடந்துகொள்'' என்றும் அறிவுரை கூறி அனுப்பினார்கள்.

வழியில் செந்தில் ''மணலூர்க்காரர்கள் சுயநலக்காரர்கள். நீ அவர்களுக்குப் பரிசுகள் கொடுத்தாய் என்பதற்காக உனக்கு மதிப்பு கொடுத்தார்கள். நான் எனக்காக இந்த சட்டையை வாங்கியதால் அவர்கள் தமக்கு என்னிடமிருந்து எதுவும் கிடைக்கவில்லை என்றே மதிக்கவில்லை. இனிமேல் அந்த ஊருக்குள் அடி எடுத்துக்கூட வைக்க மாட்டேன்'' என்றான்.

முருகனும் ''செந்தில்! நீ முதலில் உன்னைப் பற்றி தெரிந்து கொள்ளாமல் ஊராரை இகழ்கிறாயே. நீ உன்னைப் பிறர் புகழ வேண்டும் என்பதற்காகத்தானே ஆயிரம் ரூபாய் கொடுத்து சட்டையை வாங்கினாய்? அதனால் உனக்கு இப்போது மகிழ்ச்சியும் இல்லை. பாராட்டும் கிடைக்கவில்லை. பிறர் பாராட்ட இப்படி ஆயிரம் ரூபாய் செலவு செய்ததற்கு பதிலாக நீ பத்து ரூபாய்க்குப் பரிசுகள் வாங்கி அவர்களுக்குக் கொடுத்திருந்தால் அவர்கள் மகிழ்ந்து பாராட்டி இருப்பார்கள். பத்து ரூபாய் செலவில் உன் மதிப்பும் உயர்ந்திருக்கும். பிறருக்கு எதுவும் கொடாமல் நீயே எதையும் வைத்துக் கொண்டு விட்டு அவர்களை சுயநலக்காரர்கள் என்று இகழ்வது சரியல்ல'' என்றான்.

செந்திலுக்குத் தன் தவறு புரிந்தது. அப்போதிருந்து ஆடம்பரத்தைக் கைவிட்டு அவன் தன் நண்பர்களுக்குக் கொடுத்து மகிழவும் கற்றுக் கொண்டான்.





# போட்டி நடந்ததே!

சமரபுரியின் மன்னன் சமரசேனன். அவனுக்கு அமரசேனன் என்ற மகனும் அஸ்வினி என்ற மகளும் இருந்தனர். சமரசேனன் இருபது வயதான அமரசேனனுக்கு இளவரசுப் பட்டம் கட்டிவிட்டு ஆட்சிப் பொறுப்பையும் அவனிடம் கொடுத்து விட்டான்.

சமரசேனன் தன் மகள் அஸ்வினிக்குத் திருமணம் செய்ய நிச்சயித்தான். ஆனால் அமரசேனன் தன் தந்தையிடம் "என்னுடன் போட்டி போட்டு என்னை வெல்பவனே என் தங்கையை மணப்பான்" எனக்கூறி அவ்வாறே நாடெங்கும் அறிவித்து விட்டான்.

அமரசேனன் வாட்போர், மல்யுத்தம், அம்பு எய்தல் போன்ற எல்லாப் போர்களிலும் நல்ல தேர்ச்சி பெற்று சிறந்து விளங்கினான். அதனால் அவனோடு போட்டி போட எந்த அரச குமாரனும் வரவில்லை. இதனால் அஸ்வினியின் திருமணம் நடக்காமல் இருந்தது.

சமரசேனன் இதனால் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். இந்த சமயத்தில் இந்துவர்மன் என்ற அரச குமாரன் அஸ்வினியை மணந்து கொள்ள அமரசேனனுடன் போட்டியிட வந்தான். இந்திரவர்மன் பார்ப்பதற்கு அழகாக இருந்தான். நல்ல வீரனாகவும் தென்பட்டான். சமரசேனனுக்கு அவனை மிகவும் பிடித்துப் போயிற்று. அஸ்வினியும் அவனை மணக்க விரும்பியதை அவன் அறிந்தான்.

அமரசேனன் தன்னோடு போட்டி போட வந்த இந்துவர்மனை அரண்மனையில் விருந்தினனாகத் தங்க ஏற்பாடு செய்தான். அவர்களிடையே போட்டி நடக்க வேண்டிய நாளும் குறிப்பிடப்பட்டது. ஆனால் அப்போட்டி நடப்பதற்கு முதல் நாள் பூங்காவில் உலவிக் கொண்டிருந்த அரச குமாரியை யாரோ நான்கு முரடர்கள்

—கி. அருணா—

தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள்.

அப்போது அமரசேனன் ''எனக்கும் இந்துவர்மனுக்கும் நடக்க வேண்டிய போட்டியைத் தள்ளி வைக்கிறேன். முதலில் இப்போது அஸ்வினியைக் கண்டுபிடித்து அவளை இங்கே கொண்டு வரவேண்டும். அதற்காக நான் கிளம்பப் போகிறேன்'' என்றான். இந்துவர்மனும் ''நானும் அஸ்வினியைக் கண்டுபிடிக்கக் கிளம்புகிறேன். யார் முதலில் கண்டு பிடித்தாலும் அது அஸ்வினிக்கு நல்லதுதானே'' என்றான்.

இருவரும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அஸ்வினி உலாவிக் கொண்டிருந்த பூங்காவிற்குப் போய் அவள் திடீரெனக் காணாமல் போன இடத்தில் ஏதாவது தடயம் கிடைக்கிறதா என்று பார்த்தார்கள். அஸ்வினி தன்னை முரடர்கள் தூக்கிச் சென்ற வழி நெடுகத் தான் அணிந்திருந்த மாலையிலிருந்த மலர்களை உதிர்த்துக் கொண்டே சென்றிருந்தாள்.

அமரசேனனும் இந்துவர்மனும் மலர்கள் உதிர்ந்து கிடந்த வழியே சென்றார்கள். அது அவர்களை ஒரு மரத்தடியே உட்கார்ந்திருந்த யோகி வரை கொண்டு போய் விட்டது. அதன் பிறகு மலர்கள் இறைந்து கிடக்காததால் அவர்கள் இருவரும் அந்த யோகியிடம் ''சுவாமி! இவ்வழியே யாராவது சிலர் ஒரு பெண்ணைக் கட்டித் தூக்கிக் கொண்டு போனார்களா?'' என்று கேட்டார்கள்.



அவரும் ''ஆமாம். தூக்கிக் கொண்டு போனார்கள். அதோ அந்தக் காட்டுப் பாதை வழியாகத்தான் சென்றார்கள்'' என்று அவ்வழியை அவர்களுக்குக் காட்டினார்.

அவர்களிருவரும் அந்த வழியே சென்றார்கள். அது அவர்களை ஒரு குகை முன் கொண்டு போய் விட்டது. அப்போது இந்துவர்மன் ''நான் குகைக்குள் போய் அஸ்வினியை விடுவித்து அழைத்து வருகிறேன்'' என்றான். ஆனால் அமரசேனனோ ''இல்லை இல்லை. நான்தான் போவேன்'' என்று கூறிக் குகைக்குள் சென்றான். அவன் குகைக்குள் சென்றதுமே ஒரு பெரிய பாறாங்கல் விழுந்து அதன் வாசலை மூடி விட்டது.

அப்போது சற்று தூரத்திலிருந்து ஒரு பெண் அலறும் குரல் கேட்கவே இந்துவர்மன் அந்தக் குரல் வந்த இடத்தை நோக்கி ஓடினான். அங்கு முரடர்களின் தலைவன் கட்டப்பட்டிருந்த அஸ்வினியிடம் "கத்தாதே. உன்னைக் காப்பாற்ற இனி யாரும் வரப் போவதில்லை. உன்னை விடுவிக்க வந்தவர்களும் அந்த குகைக்குள் அகப்பட்டு அடைபட்டுக்கிடக்கிறார்கள். எனவே மரியாதையாக என்னை மணந்து கொள்ளச் சம்மதித்து விடு" என்று மிரட்டிக் கொண்டிருந்தான்.

இந்துவர்மன் தன் வாளை உருவிக் கொண்டு முரடர்களின் தலைவன் மீது பாய்ந்து பயங்கரமாகத் தாக்கினான். அத் தாக்குதலை எதிர்க்க முடியாமல் முரடர்களும் அவர்களது தலைவனும் அஸ்வினியை விட்டுவிட்டு ஓடி விட்டார்கள். இந்துவர்மன் அஸ்வினியின் கட்டுகளை அவிழ்த்து அவளை அழைத்துக் கொண்டு அமரசேனன் அடைபட்டிருந்த குகைக்கு முன் வந்தான்.

அப்போது அங்கு வந்த சில கிராம வாசிகளின் உதவியைக் கொண்டு இந்துவர்மன் குகையின் வாசலை அடைத்திருந்த பாறாங்கல்லை நகர்த்தி அமரசேனனை குகைக்கு வெளியே அழைத்து வந்தான். பின்னர் மூவரும் தலைநகருக்குச் சென்றார்கள்.

சமரசேனன் அஸ்வினிக்கும் இந்துவர்மனுக்கும் திருமணம் செய்ய ஏற்பாடுகளைச் செய்தான். அப்போது அமரசேனன் "எனக்கும் இந்துவர்மனுக்கும் போட்டி நடக்காமல் எப்படி இத்திருமணம் நடக்கும்?" என்று கேட்டான்.

அப்போது அஸ்வினி "என்னை விடுவிக்கும் போட்டியில் இவர்தான் ஜெயித்து விட்டாரே. உன்னால் விடுவிக்க முடியவில்லையே" என்றாள். அமரசேனன் தலைகுனிந்து கொண்டு நின்றான்.

அஸ்வினியைக் கடத்தி சென்ற நாடகத்தை சமரசேனனும் அஸ்வினியுமே சேர்ந்து நடத்தினார்கள் என்பதை அமரசேனன் அறிவில்லைதான்.






நாரதர் கிளம்பிச் சென்ற பின் தருமர் தம் தம்பிகளுடன் ராஜ சூய யாகம் செய்வது பற்றிக் கலந்து ஆலோசித்தார். ராஜசூய யாகம் தடை ஏற்பட்டு வெற்றிகரமாக முடிந்தாலும் பெரிய போர் மூண்டு பலத்த உயிர்ச் சேதம் ஏற்படும். ஆனால் அந்த யாகத்தை எப்படியாவது செய்து முடித் தால் மேலான கதியை அடையலாம். இதுபற்றி தருமர் யோசித்து எவ்விதத் தடை ஏற்பட்டாலும் அதைச் சமா ளித்து அந்த யாகத்தைச் செய்து முடிப் பது என்று தீர்மானித்தார்.

இதன் பிறகு அவரது எண்ணமெல் லாம் ராஜசூய யாகத்தை எவ்வாறு செய்வது என்பதிலேயே சென்றது. தர்பாரிலும் அந்த யாகம் பற்றியே தின மும் பேசலானார். தன் அமைச்சர்களி டம் அவர் தனக்கு ராஜசூய யாகம் செய்யத் தகுதி உள்ளதா என்றும் கேட்டார். அவர்களும் ''அரசே! அந்தத் தகுதி தங்களுக்கு நிச்சயமாக உள்ளது. எனவே அந்த யாகத்தைச் செய்து முடித்து நற்கதியையும் பெறுங்கள்'' என்றனர்.

மந்திரிகள் இவ்வாறு கூறியது அவர் எண்ணி வந்ததை மேலும் உறுதியாக் கியது. தனக்கு உதவ பலமிக்க தம்பி கள் இருப்பதால் எல்லா அரசர்களை யும் எளிதில் வென்று கப்பம் செலுத்த வைக்கலாம் என அவர் எண்ணினார். பெருத்த போர் ஏற்படலாம் என்பது பற்றி அவர் கவலைப்பட்டு தன் எண் ணத்தை கைவிட்டு விடவில்லை. எதற் கும் கிருஷ்ணரின் அபிப்பிராயம் என்ன என்று கேட்டறிய அவர் விரும்

—ஜராசந்தனின் கதை—



பினார்.

அவர் உடனேயே துவாரகைக்குச் செய்தி அனுப்பவே, கிருஷ்ணர் ஒரு சிலருடன் இந்திரப் பிரஸ்தத்திற்கு வந்தார். தருமர் அவர்களை வரவேற்று நலம் விசாரித்த பின் ''கிருஷ்ணா! ராஜசூய யாகம் செய்ய நான் மிகவும் ஆசைப்படுகிறேன். எனக்கு இங்குள்ள பலரும் உற்சாக மூட்டி என்னை அந்த யாகத்தைச் செய்யுமாறு கூறுகிறார்கள். ஆனால் அந்த யாகத்தைச் செய்ய மிகவும் திறமை வேண்டும். அது என் ஒருவனது சக்தியால் மட்டும் முடியாது. நான் பிறரது யோசனைகளை விட உங்களது அபிப்பிராயத்தைத் தான் பெரிதும் மதிக்கிறேன். வேண்டாம் என்றால் விட்டு விடுகிறேன். என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

கிருஷ்ணரும் ''தருமா! நீ ராஜசூய யாகம் செய்ய எல்லாவிதத்திலும் தகுதி பெற்றவனே. முன்பு பரசுராமர் க்ஷத்திரியர்களை வதம் செய்து அழித்த போது தப்பி மிகுந்தவர்களே ஐலேக்ஷ்வாகு வம்ச அரசர்கள். இவர்களே உண்மையான க்ஷத்திரியர்கள். பின்னர் இவர்கள் நூற்றியொரு வம்சங்களானார்கள். யயாதி, போஜ வம்சங்கள் பதினான்காயின. இந்த வம்சங்களையெல்லாம் ஜராசந்தன் வென்று சக்கரவர்த்தியாக ஆகிவிட்டான். அவன் பலமிக்கவன். கர்வம் பிடித்தவன். அவனை வெல்வது கடினமே. அவனது சேனாதிபதி சிசுபாலன். மேற்கு திசையிலுள்ள மன்னன் பகதத்தன். உன் தந்தையின் நண்பனாக இருந்த போதிலும் ஜராசந்தனுக்குக் கீழ்படிந்து வருகிறான். அவனுக்கு இன்னும் பலமிக்க அரசர்களின் துணையும் உள்ளது. அவனது தொல்லைகளைத் தாள முடியாமல்தான் நாங்கள் துவாரகைக்குப் போய் வசிக்கலானோம். ஜராசந்தன் உயிருடன் உள்ள வரை நீ இந்த யாகத்தைச் செய்து முடிக்க முடியாது. முதலில் அவனை ஒழிக்க வேண்டும்'' என்றார்.

இதைக் கேட்ட தருமர் ''மன்னர்கள் தம் சுகங்களைப் பெரிதாகக் கருதினார்களேயொழிய சாம்ராஜ்யம் நிறுவ வேண்டும் என்று நினைக்கவே இல்லை. அப்படி அவர்கள் நினைத்தாலும் அது எளிதில் நிறைவேறாது

ஜராசந்தனை உங்களாலேயே எதிர்த்து வெல்ல முடியவில்லை என்றால் எங்களால் மட்டும் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டார்.

அதைக் கேட்ட பீமன் ''இதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். ஆரம்பத்திலேயே முடியாது என்று மனம் தளர்ந்து விட்டால் எதையுமே செய்ய முடியாது. இதற்கு வழி சொல்ல கிருஷ்ணர் இருக்கிறார். நானும் அர்ஜுனனும் இருக்கிறோம். எங்களால் வெற்றி பெற முடியும்'' என்றான்.

கிருஷ்ணரும் ஜராசந்திரனைத் தந்திரமாகத்தான் கொல்ல வேண்டும் என கூறினார். ஆனால் தருமரோ ''நாடு பிடிக்கும் ஆசையில் என் இரு கண்கள் போலுள்ள பீமனையும் அர்ஜுனனையும் இழக்க நான் தயாராக இல்லை. இவர்களால் ஜராசந்தனை வெல்ல முடியாது. அதனால் நான் ராஜசூய யாகம் செய்யப் போவதில்லை'' என்றார்.

அப்போது அர்ஜுனன் ''என்னிடம் காண்டீபமும், அட்சயத் தூணிரமும் வேறு எதற்காக உள்ளன? எதிரிகளை வெல்லத்தானே?'' என்று கேட்டான். அப்போது தருமர் ''நாம் ஜராசந்தனைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ளலாம். கிருஷ்ணா! அவரைப் பற்றி நீங்கள் விவரமாகக் கூறுங்கள்'' என்றார். கிருஷ்ணரும் அவனைப் பற்றிக் கூறலானார்.

பிரகத்ரதன் மகத மன்னன். அவன் இந்திரனுக்குச் சமமானவன். அவனி



டம் மிகப் பெரிய சேனை இருந்தது. காசி மன்னனின் புதல்விகளான இரட்டையர்களை அவன் மணந்து கொண்டான். விவாகமாகிப் பல ஆண்டுகள் கழிந்தும் அவர்களுக்குக் குழந்தையே பிறக்கவில்லை. விரதங்கள், ஹோமங்கள் என என்னென்னவோ செய்தும் ஒரு பலனும் இல்லாததால் அவன் தன் மனைவிகளை அழைத்துக் கொண்டு தவம் செய்யச் சென்றான்.

காட்டில் ஒரு மரத்தின் கீழ் கௌதம வம்சத்தைச் சேர்ந்த சண்டகௌசி என்ற தவஸ்வியை பிருகத்ரதன் கண்டான். அவன் அந்தத் தவஸ்விக்கு அக்கரையுடன் பணிவிடைகள் செய்தான். சிறிது காலத்திற்குப் பின் அவர் ''அப்



பனே! நீ பல நாட்களாக எனக்குப் பணி விடை புரிந்து வருகிறாய். அதனால் மகிழ்ந்தேன். உனக்கு என்ன வேண்டுமோ கேள்'' என்றார்.

பிரகத்ரனும் ''சுவாமி! என்ன விரதம் இருந்தும் என் மனைவிகளுக்குக் குழந்தை பிறக்கவில்லை. அதனால் விரக்தி அடைந்து நாட்டை விட்டு தவம் செய்யலாமென வந்தேன். இந்த என் விருப்பம் நிறைவேற வேண்டும்'' என்றான். அப்போது ஒரு மாம்பழம் மரத்திலிருந்து சண்ட கௌசிகனின் மடியில் விழுந்தது.

அவர் உடனே அந்தப் பழத்தை பிரகத்ரதனிடம் கொடுத்து ''மன்னனே! இதை உன் மனைவிக்குக் கொடு. நீயும் நாட்டிற்குப் போ. உனக்கு மகன் பிறப்பான்'' என்று கூறி ஆசிர்வதித்து அனுப்பினார். பிரகத்ரதனும் அந்தப் பழத்தை வாங்கிக் கொண்டு தன் இரு மனைவிகளுடன் தலைநகருக்குத் திரும்பி வந்தான். அவன் அந்த மாம்பத்தை இரு சம பாகங்களாக்கித் தன் இரு மனைவிகளுக்கும் சாப்பிடக் கொடுத்தான். அதனால் அவர்களிருவரும் ஒரே சமயத்தில் கர்ப்பமுற்றார்கள்.

உரிய காலத்தில் இருவரும் ஒரே சமயத்தில் குழந்தைகளைப் பெற்றார்கள். ஆனால் அவர்கள் பெற்றது பாதிப் பாதி உடலுடன் கூடியவை. ஒவ்வொரு பாகத்திலும் ஒரு காது, ஒரு கண், ஒரு கால் என்று இருந்தன. இதைக் கண்டு அவற்றின் தாயார்கள் பயந்து போனார்கள். வேலைக்காரர்கள் அந்த இருதுண்டுளையும் நகருக்கு வெளியே ஒரு குப்பை மேட்டில் எறிந்து விட்டனர்.

அப்பகுதியில் ஜரா என்றொரு ராட்சஸி இருந்தாள். அவள் கண்களில் ஒரு குழந்தையின் இரு பாகங்கள் தென்படவே, அவள் ஒன்று சேர்த்துப் பார்த்தாள். அது முழு வடிவம் பெற்ற குழந்தையானது. அக்குழந்தை அழவே அரசனும் அரசிகளும் அதைக் கேட்டு ஓடி அங்கு வந்தார்கள். அக்குழந்தை அரச வம்சத்தில் பிறந்ததாக இருக்கும் என ஊகித்த ஜரா உடனே ஒரு அழகிய மானிடப் பெண் போலாகி குழந்தையை மன்னனிடம் கொடுத்து நடந்ததைக்கூறினாள். அரசி

கள் இருவரும் மகிழ்ந்து போய் அக் குழந்தையை வாங்கிக் கொண்டு அன் புடன் வளர்த்து வரலானார்கள்.

பிரகத்ரதன் தன் மகனுக்கு ஜரா சந்தன் என்று பெயரிட்டான். இதன் பிறகு ஜராசந்தன் வளர்ந்து பெரிய வனாகி பலமிக்கவனாக விளங்கி னான். போரில் அவன் பல மன்னர் களையும் வென்றான். கிருஷ்ணர் கம்சனைக் கொன்றார் என்ற செய்தி கேட்டு ஜராசந்தன் மதுராபுரி மீது படை எடுத்து வந்தான். ஏனெனில் கம்சனின் மனைவிகள் ஜராசந்தனின் புதல்விகளே.

கிருஷ்ணர் ஜராசந்தனைப் பற்றி இவ்வாறு கூறி ''தருமா! ஜராசந்தனை எந்த ஆயுதம் கொண்டும் கொல்ல முடியாது. பீமன் மல்யுத்தத்தில் எளி தில் அவனைக் கொன்று விட முடியும். எனவே பீமனையும் அர்ஜுனனையும் என்னோடு அனுப்பு'' என்றார்.

தருமரும் ''கிருஷ்ணா! நீங்கள் ஜரா சந்தன் இறக்க வேண்டும் என்று நினைத்தால் அது நடந்தே தீரும். இது போல நான் ராஜசூய யாகம் செய்ய வேண்டுமென நீங்கள் நினைப்ப தால் அதுவும் நடந்தே தீரும். எனவே நீங்கள் மூவரும் போய்விட்டு வெற்றியுடன் திரும்பி வாருங்கள்'' என்றார்.

கிருஷ்ணரும் பீமனும் அர்ஜுன னும் பிராம்மண வேடம் பூண்டு மகத நாட்டின் தலைநகரை நோக்கிச் சென்றார்கள். வழியில் பல நாடுகளை யும் நதிகளையும் கடந்து மகத நாட்டை அடைந்து அதன் தலைநகரை



கோரதகிரி மீது நின்று பார்த்தார்கள். அந்நகரம் மிகவும் அழகாயும் வள மிக்கதாயும் தென்பட்டது. எங்கு பார்த் தாலும் பசுமை. பசுக்களின் கூட்டம். கிரிவிரஜம் என்ற அந்நகரம் ஐந்து மலைகளால் சூழப்பட்டிருந்தது. அம் மலைக்ள் அந்நகருக்குக் கோட்டை மதில் சுவர் போல இருந்தன. இந்த மலைகளில் சைத்யகம் என்ற மலை மீது மூன்று முரசுகள் இருந்தன. யாரா வது அன்னியன் அப்பகுதியில் நுழைந் தால் அம்முரசுகள் தாமாகவே முழங்கி பலமாக ஒலிக்கும். அதனால் பீமனும் அர்ஜுனனும் கிருஷ்ணரும் முதலில் அந்த மலை மீது ஏறி அந்த மூன்று முரசுகளையும் உடைத்துச் சுக்குநூறாக் கினார்கள்.

ஆனால் அவ்வூர்க் கோட்டை வாச லில் காவல் வீரர்கள் இருப்பார்களே. அவர்களைக் கடந்து செல்வதைத் தவிர்க்க சைத்யக மலைச் சிகரத்தைத் தாண்டி நகரத்துள் மூவரும் நுழைந் தார்கள். அப்போது ஜராசந்தனுக்கு சில அபசகுனங்கள் ஏற்பட்டன. அதற் குப் பரிகாரம் செய்ய அவன் குளித்து விட்டு தியானத்தில் ஆழ்ந்தான்.

கிருஷ்ணரும் பீமனும் அர்ஜுன னும் பூக்காரனிடம் போய் மாலை களை எடுத்து அணிந்து கொண்டு உடலில் சந்தனம் பூசிக் கொண்டு ஜரா சந்தன் இருக்குமிடத்திற்கு வந்தார் கள். அவர்கள் உண்மையில் அந்தணர் கள் என்று எண்ணி ஜராசந்தன் அவர் களுக்கு மரியாதை செய்து உபசரித் தான். ஆனால் அவர்கள் அந்த மரி யாதைகளையெல்லாம் ஏற்காமல் பேசாமல் இருந்தனர்.

கிருஷ்ணர் மட்டும் பீமனையும் அர்ஜுனனையும் சுட்டிக்காட்டி ஜராசந்தனிடம் "இவர்களிருவரும் மௌன விரதம் மேற்கொண்டிருக் கிறார்கள். நள்ளிரவான பிறகே உன்னோடு பேசுவார்கள்" என்றார். ஜராசந்தனும் "அப்படியானால் நள்ளிரவு வரை இவர்களை உபசரித் துக் கவனித்துக் கொள்ளச் சொல் கிறேன்" எனக்கூறி அம்மூவரையும் யாக சாலைக்கு அனுப்பினான்.



# அம்புலிமாமா செய்திகள்



## பிறந்த நாள் பரிசு!

சிறுவர்கள் தம் பிறந்த நாள் பரிசு களென உறவினர் களிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் பெறுவது இயல்பே. அப்பரிசுகள் அவர்களை மகிழ்ச்சியிலும் ஆச்சரியத்திலும் ஆழ்த்தி விடுகின்றன. கேரளாவில் கானூர் மாவட்டத்து தாளிம் பராவிலுள்ள பிரவீண் என்ற பதினைந்து வயதுச் சிறுவனுக்கு அத்தகைய வியப்பையே அளித்தது. அவனுக்குக்கிடைத்த பரிசு என்ன தெரியுமா? அவன் எழுதிய 108 கவிதைகளின் தொகுப்புதான் அது. தன் கவிதை களின் தொகுப்பு அச்சாவதைப் பிரவீண் அறிந்திருந்த போதிலும் அது அவ்வளவு விரை வில் கிடைக்குமென அவன் எதிர்பார்க்க வில்லை. சிறுவர்கள் எழுதும் கவிதைகள், கதைகள், கட்டுரைகள் அச்சு வடிவம் பெற்றா லும் ஒருசிறுவனின் கவிதைத் தொகுப்பு புத்தக உருவம் பெறுவது மிக மிக அரிது. அவ்வூர் கேந்திரிய வித்தியாலயத்தில் பத்தாவது வகுப்பில் படிக்கும் பிரவீண் ஹிந்தியிலும் சம்ஸ்கிருதத்திலும் கூடக் கவிதைகள் புனை கிறானாம்.

## தபலா வாசிப்பதில் தேர்ச்சி

அகில இந்திய வானொலியில் வாய்ப் பாட்டு, வாத்தியம் ஆகியவற்றில் கச்சேரிகள் செய்ய குறைந்தது ஒருவருக்கு 16 வயதாவது நிறைவடைந்திருக்க வேண்டும். ஆனால் பனி ரெண்டே வயதான தீபக் மேஹ்தா தபலா வாசிக் கும் திறமையைக் கண்டு டில்லி வானொலி நிலையத்து அதிகாரிகள் அந்த விதியைத் தளர்த்தி அச்சிறுவனை 'பி' கிரேட் கலைஞனாக ஏற்றுக்கொண்டுள்ளனர். தீபக் ஆறாவது வயதிலிருந்தே தபலா வாசிக்கக் கற்கலானான். முதலில் தானே கற்றுப் பழகிய அவன் முறை யாக ஒரு ஆசிரியரிடமும் சென்று கற்றான். இப் போது அவன் அதனை வாசிக்கும் பல உத்தி களைக் கற்று 'நாஷனல் டாலன்ட் ரிஸர்ச் ஸ்காலர்ஷிப்'பையும் அடைந்திருக்கிறான். இந்த உதவித்தொகை அவனது இருபதாவது வயது வரை கிடைத்துக் கொண்டே இருக்கும். தீபக்கைப்பற்றி ஜீ தொலைக்காட்சி ஒரு வாழக்கைச்சித்திரம் தயாரித்து வருகிறது.

## இந்திய இளம் மேதாவி!

பிரேஸிலில் சால்வரங்கோவில் அண்மை யில் 10லிருந்து 14 வயதான இளைஞர்களுக்கு உலக இளைஞர் செஸ் திருவிழா நடைபெற்றது. அதில் சிறுவர்களுக்கான செஸ் சாம்பியன் போட்டியில் இந்தியவிலிருந்து ஏழு சிறுவர், சிறுமிகள் கலந்து கொண்டார்கள். அவர்களில் டில்லியைச்சேர்ந்த தானியா சச்தேவ் என்ற எட்டு வயதுச் சிறுமியும் ஒருத்தி. இந்தப் போட்டியில் அவள் கலந்துகொள்ள உலக செஸ் பெடரேஷன் தனிப்பட்ட அனுமதி வழங்கியது. பெடரேஷனின் தலைவர் ''இந்த இந்தியச் சிறுமியை இப்போட்டியில் அனும தித்ததற்கு நான் மிகவும் மகிழ்ச்சி அடை கிறேன்'' என்றார். இந்த இளம் பிராய மேதையின் திறமை அற்புதமானது என ஆசிய பெடரேஷன் தலைவரும் கூறி யுள்ளார்.



# மணிமலர் மரம்

மணிமலர்மரம் என்பதை ஆங்கிலத்தில் டுலிப் என்பார்கள். இம்மரம் ஆப்பிரிக்காவின் அங்கோலா நாட்டிலிருந்து முதல் முதலில் இலங்கைக்குக் கொண்டு வந்தார்களென்றும் பின்னர் அது நம் நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டதென்றும் கூறுகிறார்கள். இப்போது இவ்வகை மரம் உலகின் எல்லா நாடுகளிலு பரவியுள்ளது. நம் நாட்டில் இம்மரங்கள் மகாராஷ்டிரக் கடற்கரையோரம் நிறையத்தென்படுகின்றன. வடஇந்தியாவில் எப்போதும் பசுமையாக உள்ள மரம் தென்னிந்தியாவில் கோடைகாலத்தில் இலை உதிர்ந்து காணப்படுகிறது.

இதன் இலைகள் அடர்ப்பச்சை நிறத்தில் எதிர் எதிராக அமைந்திருக்கும். குளிர் காலத்தில் இளம் பச்சை நிறத்தில் மொட்டுகள் விடும். கிளை நுனியில் மணியின் வடிவில் சிவப்பு நிறமலர்கள் மலரும். இவை செப்டம்பரிலிருந்து மே மாதம் வரை கொத்துக் கொத்தாய் மலர்ந்து கொண்டே இருக்கும். இம்மரம் வெப்பப் பகுதியில் மட்டுமே காய் காய்க்கும். காய்கள் நீளமாக இருக்கும். இவ்வகை மரம் மெதுவாகத்தான் பரவும். இதன் பலகை லேசாய் இருப்பதால் பயன்படுகிறதில்லை.

மணிபோலுள்ள இம்மலர்களை ஆங்கிலத்தில் ஸ்கார்லெட் பெல் எனக் கூறுகிறார்கள். இதன் மொட்டுக்களைக் கசக்கிப் பிழிந்தால் நீர் வெளிவரும். இதனால் இம்மரத்திற்கு 'பௌன்டன் ட்ரீ' என்றொரு பெயரும் உண்டு.

தாவர இயல்படி இதன் பெயர் ஸாதோடிகாலபோனுலாமா' என்பதாம். இப்பெயரும் இதன் மலர்மணிபோல இருப்பதாலே வந்ததாகும். இவை முக்கியமாக அலங்கரிக்கவே பயன்படுகின்றன.



நம் நாட்டு முனிவர்கள் - 10

# பராசரர்

• கல்மாஷபாதன் என்ற மன்னன் ஒரு நாள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். ஒரு மலைச்சாரலில் மிகக்குறுகிய பாதை ஒன்றின் வழியாக அவன் போய்க் கொண்டிருக்கையில் வசிஷ்டமுனிவரின் புதல்வர் சக்தி அவனுக்கு நேர் எதிராக அப்பாதையில் வந்து கொண்டிருந்தார். மன்னன் அவரிடம் ஒரு பக்கமாக விலகிப் போ என்னவே அவரும் ''நீ தான் ஒரு பக்கமாக விலகிப் போக வேண்டும்'' என்றார்.

அதனால் மன்னன் கோபம் கொண்டு தன் வில்லால் அவரை அடிக்க அவரும் ''நீ மனிதன் போலல்லாமல் ராட்சஸ மிருகம் போல் நடந்த கொண்டாய். அதனால் நீ கொடிய மிருகமாக ஆகக் கடவாய்'' என்று சபித்தார். மறுவிநாடியே அம்மன்னன் புலியாக மாறி உறுமி சக்தியின் மீதே பாய்ந்து அவரைக் கொன்றான். அதன்பின் அவன் ராட்சஸனாகித் திரியலானான்.

சக்தி முனிவரின் மனைவி அதிருஸ்யவந்தி தன் கணவன் இறக்கும் போது கர்ப்பமுற்றிருந்தாள். ஆனால் அதற்குப் பனிரெண்டு ஆண்டுகளுக்குப் பிறகே குழந்தையைப் பெற்றாள். கர்ப்பத்திலிருந்தவாறே அக்குழந்தை வேத மந்திரங்கள் கூறுவதை யாவரும் கேட்டு வியந்தனர். குழந்தை பிறந்தபின் அதற்குப் பராசரர் என்ற பெயரை வைத்தார்கள். பராசரன், கபிலர், புலஸ்தியர் முதலிய முனிவர்களின் சீடனாகி கல்வி கற்றான்.

பராசரனுக்குத் தன் தந்தையைக் கொன்றவன் ஒரு ராட்சஸன் எனத் தெரியவே அவன் எல்லா ராட்சஸர்களும் அழியவேண்டுமென ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தான். அதை அறிந்த அவனது தாத்தா வசிஷ்டர் வந்து அந்த யாகத்தை நிறுத்தும்படிக் கோரினார். பராசரனும் யாகத்தை நிறுத்தி யாகத் தீயை எடுத்து இமயமலை மீது வீசினான். இன்றும் இமயமலைக் காடுகளில் தீப்பிடித்தால் அது பராசரர் எறிந்த அக்கினி எனக் கூறி வருகிறார்கள்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. சமாதானச்சின்னம் எந்தப் பறவை?
2. பிரிட்டனின் முதன் முதலான பெண் பிரதம மந்திரி யார்?
3. கிரகங்களில் மிகப் பெரியது எது?
4. பாம்பு ஏன் கண்ணைத் திறந்தவாறே தூங்குகிறது?
5. ராஜஸ்தானில் மட்டும் காணப்படும் பாம்புகள் தின்னும் பெரிய பறவை எது?
6. 'பிரார்த்தனைச் சக்கரங்கள்' எங்கே உள்ளன? அவற்றை யார் பயன்படுத்துகிறார்கள்?
7. ஜப்பானியர் உருவாக்கிய மலர் அலங்காரக் கலையின் பெயர் என்ன?
8. உலகிலேயே மிக நீளமான சுவர் எது?
9. 'ஈபெல் டவர்' எங்குள்ளது?
10. தர்மாமீடரில் பயன்படுத்தப்படும் திரவ உலோகம் எது?
11. அமெரிக்காவின் முதல் ஜனாதிபதி யார்?
12. தொலைப்பேசியை கண்டுபிடித்தவர் யார்?
13. எதனை வண்ணவிழா என்கிறார்கள்?
14. உலகின் மிக பழைய மதம் எது?
15. ஸ்ரீலங்காவின் முந்தைய பெயர் என்ன?
16. உலகிலேயே மிக உயரமான 'மினாரட்' எது?
17. இந்தியாவைத்தன்நாடாகக்கொண்டு நோபல்பரிசு பெற்ற அயல்நாட்டவர் யார்?
18. பூப்பந்து விளையாட்டு முதலில் எங்கு ஆரம்பிக்கப்பட்டது?
19. காந்தி மக்களைப் பயன் படுத்தச்சொன்ன கைத்தறி நெசவாடையின் பெயர் என்ன?
20. டில்லி வழியாகப் பாயும் நதி எது?

## விடைகள்

1. புறா
2. மார்க்கரெட் தாச்சர்
3. வியாழ கிரகம்
4. கண் இமை இல்லாததால்
5. பஸ்டர் எனும் பறவை
6. திபெத்தின் பௌத்தர்கள்
7. இகபானா
8. சீன பெரிய மதில்சுவர்
9. பிரான்ஸின் பாரிஸ் நகரில்
10. பாதரசம்
11. ஜார்ஜ் வாஷிங்டன்.
12. அலெக்ஜாண்டர் கிரஹாம் பெல்
13. ஹோலிப் பண்டிகை
14. ஹிந்து மதம்
15. சிலோன்
16 டில்லியிலுள்ள குதுப்மினார்
17. மதர் தெரிஸா
18. இந்தியாவில்
19. கதர்
20. யமுனை



# மாமியார் மெச்சிய மருமகள்

மருதூர் மணியனுக்கு ஆனி மாதத்தில் திருமணம் நடந்தது. மணமானதும் முதல் ஆடி மாதத்தில் மணப்பெண் மணமகனோடு அவன் வீட்டில் இருக்கக்கூடாது என்ற வழக்கப்படி உமாவை அவளது பெற்றோர் தம் ஊருக்கு அழைத்துச் சென்று விட்டனர். உமா இனி ஆவணி மாதத்தில் தான் திரும்பி வருவாள்.

ஆவணியும் பிறந்தது. மணியன் தன் தந்தையிடம் உமா எப்போது வருவாள் எனக் கேட்கவே அவன் தந்தையும் ''உமாவின் பெற்றோர்கள் தாம் ஒரு நல்ல நாளைப் பார்த்து அவளை இங்கு கொண்டு வந்து விட வேண்டும். எதற்கும் நாமே நல்ல நாளை புரோகிதரிடம் கேட்டு அதை உமாவின் பெற்றோர்களுக்கு எழுதி அவளை இங்கே கொண்டு வந்து விடும்படி எழுதலாம். நீ போய் புரோகிதரைப் பார்த்து விட்டு வா'' என்று கூறி அவனைப் புரோகிதர் வீட்டிற்கு அனுப்பினான்.

மணியன் புரோகிதரைக் காணப் போனபோது புரோகிதரின் மனைவி அங்கு இருந்தாள். அவள் மணியனைப் பார்த்து ''யாரது? மணியனா? நீ கல்யாணம் செய்து கொண்ட உமா நல்லவள் தானே. என் மருமகளைப் போல எதற்கெடுத்தாலும் சண்டை போடுபவள் இல்லையே. என் வீட்டுக்காரர் தன் தங்கையின் மகள் என்று அவளை என் மகனுக்குக் கட்டி வைத்து விட்டார். அவள் வாய்க்கு பயந்து நான் இந்த வீட்டில் முடங்கிக் கிடக்க வேண்டியுள்ளது'' என்று தன் மனக் குறையை அவனிடம் சொன்னாள்.

ஆனால் அதைக் கேட்டுக் கொண்டே புரோகிதரின் மருமகள் அங்கு வந்து விட்டாள். அவள் தன் மாமியாரைப் பார்த்து ''என்ன இது? ஊராரிடமெல்லாம் நம் வீட்டு விவ

—எஸ். சோபினி—

காரங்களைத் தம்பட்டம் அடித்து புகார்செய்வது? வயதானவர் என்றால் மரியாதையாக இருக்க வேண்டும். தெரிந்ததா?'' என்றாள். புரோகிதரின் மனைவியும் ''மருமகளாய் லட்சண மாய் மாமியாரை மதித்து நடக்க வேண்டும். அதை நீ முதலில் தெரிந்து கொள்'' என்று கூற இருவரிடையே வாய்ச் சண்டை வலுத்து விட்டது.

இதைக் கண்ட மணியன் ''ஓ! இப் படித்தான் மாமியார் மருமகள் சண்டை இருக்குமா? என் மனைவி உமா வந்தால் என் தாயாருடன் இப் படிச்சண்டை போடுவாளா?'' என்று யோசித்தவாறே அவர்களை அங் கேயே விட்டு விட்டு வீட்டிற்குள் போய்ப் புரோகிதரைக் கண்டான். அவரும் ஆவணி மாதத்தில் ஒரு நல்ல நாளை குறித்துக் கொடுக்கவே அவ ருக்கு கொடுக்க வேண்டிய தட்சணை யைக் கொடுத்து விட்டு மணியன் தன் வீட்டிற்குச் சென்றான்.

மணியனின் தந்தையும் அந்த நல்ல நாளைப் பற்றி உமாவின் தந்தைக்குக் கடிதம் எழுதவே உமாவின் தந்தையும் ஆடிச் சீருடன் உமாவை அழைத்துக் கொண்டு மரு தூருக்கு வந்து அவளது கணவனின் வீட்டில் விட்டு விட்டுச் சென்றார்.

மணியனின் தாய் பார்வதியும் தன் மருமகள் உமாவை அன்புடன் வர வேற்றாள். உமாவும் தன் மாமியா ருடன் நன்றாகப் பழகி வீட்டு வேலை களை எல்லாம் தன் மாமியாரைச் செய்ய விடாமல் தானே செய்து வந் தாள். பார்வதியும் உமாவைத் தன்





தில்லை. அவர்கள் எதையும் உமா விடம் தான் கேட்கிறார்கள். நீ உன் மதிப்பை இழந்துவிட்டாய். இது இப்படியே போனால் உன் கதி அதோகதி தான்'' என்று கூறிவிட்டு போனாள்.

பவானி கூறியதை அவள் ஊருக்குப் போனபின் பார்வதி நினைத்துப் பார்த்தாள். ஆமாம்! அவள் சொன்னது சரியே. அந்த வீட்டில் தன்னிடம் தன் கணவனோ அல்லது மகனோ முன்பெல்லாம் யோசனை கேட்டது போல இப்போது கேட்கவே இல்லையே என்று பார்வதி எண்ணிப் பார்த்தாள். அதையெல்லாம் நினைக்க நினைக்க அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

ஒருநாள் சலவைக்குத் துணிகளை எடுத்துப் போகக் கிழக் குப்பாயி வந்தாள். துணிகளை ஒழுங்காக வெளுத்துக் கொண்டு வா என்று பார்வதி அவளிடம் கூறவே குப்பாயியோ ''உனக்கு ஏனம்மா இந்தக் கவலை? எல்லாம் உங்கள் மருமகள் கவனித்துக் கொள்கிறாளே'' என்று சொல்லிவிட்டுத் துணிகளை எடுத்துக் கொண்டு போனாள்.

மகள்போலக் கருதி அன்புடன் நடத்தி வந்தாள்.

ஒருநாள் பார்வதியைக் காண அவளது தங்கை பவானி வந்தாள். அவளுக்கு உமாவைப் பிடித்திருந்தாலும் அவளால் அவ்வீட்டில் எதையும் தன் இஷ்டம் போல எடுத்துக் கொள்ளவோ அல்லது பயன்படுத்தவோ முடியாமல் போயிற்று. இதற்குக் காரணம் அந்த வீட்டில் எதையும் உமாவைக் கேட்டே செய்ய வேண்டும் என்ற நிலை உருவாகி இருந்ததுதான்.

பவானி ஊருக்குக் கிளம்பு முன் தன் அக்கா பார்வதியிடம் ''இதோ பார். நீ இந்த உமாவுக்கு நிறைய இடம் கொடுத்து விட்டாய். உன்னை உன் கணவனோ அல்லது மகனோ மதிப்ப

கிழக் குப்பாயி கூடத் தன்னை மதிக்கவில்லையே என்று நினைக்க நினைக்க பார்வதிக்கு துக்கம் ஒருபுறமும் ஆத்திரம் ஒருபுறமுமாக வந்தது. வீட்டின் நிர்வாகம் முழுவதுமே தன் கையை விட்டு நழுவி உமாவிடம் போய்விட்டதே என்று எண்ணி அவள் உமாவின் ஒவ்வொரு சொல்லிலும்

செயலிலும் ஏதாவது குற்றம் குறை சொல்லலானாள். இதனால் உமாவிற்கும் பார்வதிக்கும் சண்டை சச்சரவுகள் அடிக்கடி ஏற்படலாயின. இருவரின் வாக்கு வாதங்களைக் கேட்டு மணியன் மனநிம்மதியையே இழந்து விட்டான்.

அவனுக்கு வீட்டில் தங்கி இருப்பதே வேம்பாகக் கசந்தது. அதனால் பகலில் மட்டுமல்லாமல் இரவிலும் தன் வயலிலேயே இருந்து பொழுதை கழிக்கலானான். இதைக் கண்ட மணியனின் தந்தை அவனிடம் ''உன் சின்னம்மா பவானி வந்து விட்டுப் போனதிலிருந்து உன் தாயாரின் போக்கு மாறி விட்டது. அவள் ஏதோ சொல்லி பார்வதியின் மனதைக் கெடுத்து விட்டாள். இதற்கு நான் ஒரு வழி செய்து அவளை முன் போல மாற்றுகிறேன். நீ வீட்டிற்குப் போ. எதை உமா கூறினாலும் அதுவே சரி என்று உன் அம்மாவிடம் சொல். உன் தாயாரைக் கடிந்து கொள். பிறகு நடக்க வேண்டியதை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கூறி அவன் எப்படி நடிக்க வேண்டும் என்பதையும் சொன்னான்.

அன்று மணியன் வயலிலிருந்து வீட்டிற்குள் நுழைந்ததும் வழக்கம் போல அவனது தாயார் உமாவைப் பற்றி புகார் கூறினாள். அப்போது மணியன் ''அவள்தான் எல்லா வேலைகளையும் செய்கிறாளே. நீ பேசாமல் சாப்பிட்டு விட்டுக் கிடப்பதுதானே. அப்படி இருக்க இஷ்டமில்லை என்றால் சொல். நானும் அவளும் வேறு எங்காவது போய் இருக்கிறோம்.



தந்தையிடம் என் பாகத்தைப் பிரித்துக் கொடுக்கச் சொல்'' என்று கத்தினான்.

அதைக்கேட்ட அவனது தந்தை ''மணியா! நீ எங்கே வேண்டுமானாலும் போய்த் தொலை. ஆனால் நீ உன் அம்மாவை மட்டும் ஏதாவது சொன்னால் அதைக் கேட்டுக் கொண்டு நான் சும்மா இருக்க மாட்டேன்'' என்றான். பார்வதியும் ''அப்படிச்சொல்லுங்கள். அவனுக்கு உறைக்கும்படி. நீங்கள் எப்போதும் என்னோடுதான் இருப்பீர்கள் என்பது அவனது மரமண்டையில் உறைக்கட்டும். நேற்று வந்த பெண்டாட்டியின் பேச்சைக் கேட்டு இப்படி ஆட்டம் போடுகிறான் பயல்'' என்று சந்தோஷப்பட்டவாறே கூறினாள்.

அப்போது மணியன் ஏளனமாக ''ஓகோ! உனக்கு உன் கணவர் பக்க பலமாக இருக்கிறார் என்றால் நான் என் மனைவிக்குப் பக்க பலமாக இருக்கக்கூடாதா? என் தந்தை தன் மனைவியின் பேச்சைக் கேட்டுத்தானே ஆடுகிறார்? நான் மட்டும் என் மனைவியும் உன் மருமகளுமான உமாவின் பேச்சைக் கேட்டு நடக்கக் கூடாதா? எல்லாம் கூடி இருந்தால்தான் குடும்பம். உன் நாட்டாண்மை போய் விட்டது என்று நீ நினைத்தால் அதன் விளைவு நாசமே'' என்றான்.

மணியன் சொன்னதைக் கேட்ட பின் பார்வதிக்கு தன் தவறு புரிந்தது. அவளும் ''மணியா! சொல்வார் பேச்சைக் கேட்டு என் அதிகாரமே போய் விட்டதாக எண்ணி விட்டேன். உமா என்னைத் தன் தாயார் போலத்தான் கருதி மதித்து வந்தாள். மாமியார் என்று என்னை நினைத்துக் கொண்டு மமதையால் இப்படி நடந்து விட்டேன். இப்போது என் மனம் மாறி விட்டது'' என்றாள்.

உமாவும் ''அத்தை! போனது போகட்டும். இனிமேல் நாம் சந்தோஷமாக முன்போல இருப்போம். நீங்கள் மெச்சும் மருமகளாகவே நான் இருப்பேன்'' என்றாள். அப்போது முதல் அக்குடும்பத்தில் அமைதியும் சந்தோஷமும் நிலவியது.





# ஓடிவிட்ட பிசாசுகள்

கந்தனும் வரதனும் நண்பர்கள். அவர்களது குடிசைகளுக்கிடையே ஒரு நாவல் மரம் இருந்தது. அம்மரத்தின் கீழே அவர்கள் ஒரு மேடையைக் கட்டி ஓய்வு நேரத்தில் அதன் மீது உட்கார்ந்து ஏதாவது பேசிக் கொண்டிருப்பது வழக்கம்.

ஒருநாள் அவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் கந்தன் வரதனிடம் ''வரதா! என்றைக்காவது நமக்கு நிறையப் பணம் கிடைத்து மாடி வீடு கட்டிக் கொண்டாலும் குறுக்குச் சுவர் எழுப்பாமல் இந்த மேடையை மட்டும் விட்டு வைத்து இதன் மீது உட்கார்ந்து பேசிக் கொண்டே இருப்போம்'' என்றான்.

வரதனும் ''ஓ! அப்படியே செய்வோம். ஆனால் ஒரு சிறு மாற்றம். இந்த மண் மேடையைச் சலவைக்கல் மேடையாக அப்போது மாற்றி விடுவோம். அதற்கு ஐயாயிரத்திற்கு மேல் செலவும் ஆகி விடாது'' என்றான்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் உலரப் போட்டிருந்த துணிகளை எடுத்துப் போக கந்தனின் மனைவி அங்கு வந்தாள். அவள் ''முகம் பார்க்கும் கண்ணாடி உடைந்து இரண்டு வாரமாகி விட்டது. பட்டணம் போய் ஒரு கண்ணாடி வாங்கி வாருங்கள் என்றால் காதில் போட்டுக் கொள்ளாமலே இருக்கிறீர்கள்'' என்று சலித்துக் கொண்டே கூறினாள்.

கந்தனும் ''எல்லாம் காதில் விழுந்தது. வாங்கி வருகிறேன்'' என்றான். இதே சமயம் குப்பையை வெளியே கொட்ட வந்த வரதனின் மனைவியும் ''வீட்டில் எலிகளின் தொல்லை தாங்க முடியவில்லை. பட்டணத்திலிருந்து எலிப்பொறி வாங்கி வாருங்கள் என்று சொல்லிக் கொண்டே இருக்கிறேன். ஊரை விட்டு இவர் நகர்வதாகக் காணோம்'' என்றாள்.

—காரை. குருமூர்த்தி—



அப்போது இருவரும் ''நாங்கள் இப்போதே பட்டணத்திற்குப் புறப் படுகிறோம். நீங்கள் இருவரும் கேட்ட கண்ணாடியையும், எலிப் பொறியை யும் வாங்கி வந்து விட்டுத்தான் மறு வேலை'' என்றார்கள். அவர்கள் அவ் வூரிலிருந்து பட்டணம் போகவேண்டு மென்றால் இடையிலுள்ள அடர்ந்த காட்டைக் கடந்து செல்லவேண்டும். பட்டணம் போய் விட்டு இருட்டுவ தற்கு முன் ஊர் சேர அவர்கள் முயன் றார்கள். ஆனால் காட்டு வழியே வரு கையில் மழை பிடித்துக் கொண்டது.

என்ன செய்வார்கள் பாவம்! நனை யாதிருக்க ஒரு புளிய மரத்தின் கீழ் அவர்கள் ஒதுங்கினார்கள். இடியும் மின்னலும் சேர்ந்து அவர்களை பய முறுத்தின. கந்தன் அப்போது ''அட கஷ்டமே! இப்படி வந்து மாட்டிக் கொண்டோமே'' எனவே வரதனும் ''கவலைப்படாதே. சற்று நேரத்தில் மழை நின்று விடும்'' என்று ஆறுதலா கக் கூறினான்.

மழை நடு ராத்தியில்தான் நின்று அவர்கள் அங்கிருந்து கிளம்பிக் கொஞ்ச தூரம் போனதும் ஒரு ஆல மரத்தின் விழுதுகளைப் பிடித்துக் கொண்டு இரு பெண் பிசாசுகள் ஊஞ்ச லாடுவதைக் கண்டார்கள். அவற்றின் பார்வையில் படாமல் தப்பிப் போக அவர்கள் முயன்றபோது அவை அவர் களைப் பார்த்து விட்டன. அவற்றில் ஒன்று குட்டை. மற்றது நெட்டை.

குட்டைப் பிசாசு உரத்த குரலில் ''பயப்படாதீர்கள். இப்படி அருகில் வாருங்கள்'' எனக் கூப்பிட்டது. இரு வரும் நடுநடுங்கியவாறே அவற்றின் பக்கம் போய் நின்றார்கள். அப்போது நெட்டைப் பிசாசு ''உங்களிருவருக் கும் திருமணமாகி விட்டதா?'' என்று கேட்டது.

கந்தனும் ''ஆகிவிட்டது! அதனால் தான் இப்படி அவஸ்தைப்படு கிறோம். எம் மனைவியரின் பேச்சை எதிர்க்க முடியாமல் பட்டணத்திற்குப் போய்விட்டுத் திரும்பும் வழியில் இப்படி ஒரு நிலையில் அகப்பட்டுக் கொண்டு விட்டோம்'' என்றான். அது கேட்டு குட்டி பிசாசு சிரித்தவாறே ''உங்களுக்குக் கல்யாணமாகி விட்ட தென்றால் உங்கள் மனைவிகளிடம்

இப்படியா பயப்பட வேண்டும்?'' என்று கேட்டது.

கந்தனும் வரதனும் ''பயமில்லை. அவர்கள் மேல் அன்பு'' என்றார்கள். அதுகேட்டு அவை ''நாங்கள் உங்களைப் போன்றவர்களை எதிர்பார்த்துத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம். நீங்கள் வீட்டிற்குப் போனதும் நாங்கள் சொல்வது போலச் செய்ய வேண்டும்'' என்றன.

கந்தன் அதுகேட்டு ''அதனால் எங்களுக்கு என்ன லாபம்?'' என்று கேட்கவே அவை ''பொறுத்துப் பாருங்கள். நாங்கள் கூறுகிறபடி உங்கள் மனைவிகளிடம் நடந்தால் என்ன ஏற்படுகிறது என்று நாளை இரவு இதே நேரத்திற்கு இங்கே வந்து சொல்லுங்கள். அதற்காக உங்களுக்கு இப்போது ஆளுக்கு ஒரு தங்க நாணயம் கொடுக்கிறோம்'' என்றன.

தங்க நாணயம் என்றதுமே வாயைப் பிளந்த கந்தனும் வரதனும் ''சரி. சொல்லுங்கள்'' என்றார்கள். பிசாசுகளும் அவர்கள் செய்ய வேண்டியதைக் கூறி ''இதற்கு மேல் அவர்களிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாதீர்கள். நாளை இரவு மறுபடியும் வாருங்கள்'' எனக் கூறி அவர்களிடம் இரு தங்க நாணயங்களைக் கொடுத்தன.

கந்தனும் வரதனும் பிசாசுகள் கூறியவற்றைத் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டே சற்று நேரத்திற்குப் பின் தம் ஊரை அடைந்தார்கள்.



கந்தனின் மனைவி கண்ணாடி எங்கே என்று கேட்கவே, அவன் அவளை ஒரு புறமாக தள்ளிவிட்டு எதுவும் பதில் கூறாமல் சென்றான். அவன் மனைவியோ ''உங்களுக்கு என்ன வந்தது?'' எனக்கூறி கதவைப் படாரென்று மூடினாள்.

இதுபோல வரதனின் மனைவியும் தன் கணவனின் கையில் எலிப் பொறி இல்லாததைக் கண்டு ''எங்கே எலிப் பொறி?'' எனக் கேட்கவே அவன் அவளது முதுகில் லேசாகக் குத்திவிட்டு பதில் பேசாமல் வீட்டினுள் சென்றான். அவன் மனைவியும் ''இதென்ன? உங்களை ஏதாவது பிசாசு பிடித்துக் கொண்டு விட்டதா?'' என்று கேட்டாள்.



மறுநாளிரவு காட்டிற்குச் சென்ற கந்தனும் வரதனும் தம் மனைவியர் முன்தினம் இரவில் கூறியதை அந்த இரண்டு பிசாசுகளிடமும் சொன்னார்கள். அதைக் கேட்டு அவை விழுந்து விழுந்து சிரித்தன. பிறகு ஆலமரப் பொந்திலிருந்து இரு தங்க நாணயங்களை வேறு எடுத்து அவர்களிடம் கொடுத்தன. அதனால் மகிழ்ச்சி அடைந்த அவர்கள் வீடு திரும்ப முயல் கையில் அவை "உங்களுக்கு இன்னமும் நிறையத் தங்க நாணயங்கள் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசை இருக்கிறதா?" என்று கேட்டன.

கந்தன் "நாளைக்குள் நான் லட்சாதிபதியாகி விட ஆசைப்படுகிறேன்" என்றான். வரதனும் "நான் நாளை சூரியோதயம் ஆவதற்கு முன் லட்சாதிபதியாக ஆசைப்படுகிறேன்" என்றான். பிசாசுகளும் "இப்படி ஆசைப்படுவதில் தவறு இல்லை. நாளையும் நாங்கள் சொல்வது போலச் செய்தால் உங்களுக்கு இன்னும் ஓரோர் தங்கக்காசு கிடைக்கும்" என்று கூறி அவர்கள் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லி அனுப்பின.

வீடு திரும்பி அவர்கள் இருவரும் தம் மனைவிகளைக் கோபித்துக் கொண்டு "லட்சலட்சமாகச்சம்பாதிக்கும் அதிர்ஷ்டம் எனக்கு இருந்தாலும் உன் தரித்திர முகத்தை தினமும் பார்ப்பதால் இரண்டு ரூபாய் கூடச் சம்பாதிக்க முடியவில்லை" என்று அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகத் தம் மனைவியரிடம் சொன்னார்கள். அதைக் கேட்டு அவர்களது மனைவிகள் கோபித்துக் கொள்ளவில்லை. எதுவும் பேசாமல் இருந்தார்கள்.

அன்றிரவு கந்தனும் வரதனும் பிசாசுகளிருக்கும் இடத்திற்குச் சென்றார்கள். அவர்கள் பிசாசுகளிடம் "நாங்கள் அவர்களைத் திட்டி அதனால் கோபித்துக்கொண்டு தம் பிறந்த வீட்டிற்குப் போய் விடுவார்கள் என்று எதிர்பார்த்தோம். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. அவர்கள் எதிர்த்துப் பேசக்கூடவில்லை" என்றார்கள்.

முன்பெல்லாம் அவர்கள் கூறியவற்றைக் கேட்டுச் சிரித்த பிசாசுகள் இம்முறை அவர்கள் கூறியதைக் கேட்டு உற்சாகமிழந்தவை போலத்

தென்பட்டன. அவை ''சீச்சீ! இப்படிப் பட்டவர்களா உங்கள் மனைவிகள்? எங்கள் கணவன்மார்கள் இவ்வாறு கூறியதால்தான் நாங்கள் எங்கள் வீட்டுக்கொல்லைப் புறத்திலிருந்த கிணறுகளில் குதித்து தற்கொலை செய்து கொண்டு இப்படிப் பிசாசுகளாகி விட்டோம். உங்கள் மனைவிகளுக்கு சூடு சொரணை என்பதே இல்லை போலிருக்கிறதே'' என்றன.

அப்போது ''சூடு சொரணை அற்றவர்களல்ல அவர்கள். உங்களை போல முட்டாள்களல்ல'' என்று குரல் ஒலிப்பது கேட்டு பிசாசுகளும் திடுக்கிட்டன. கந்தனும் வரதனும் கூடத் திகைப்புற்றார்கள். அப்படிக் குரல் கொடுத்தவர்கள் அவர்களது மனைவிகளே. தம் கணவர்களின் போக்கில் ஏதோ மாறுதல் ஏற்பட்டுள்ளது கண்டு அவர்கள் தம் கணவன்களை அவர்களுக்குத் தெரியாமல் பின் தொடர்ந்து காட்டிற்கு வந்தார்கள்.

அவர்களுக்குத் தம் கணவர்களிடம் ஏற்பட்ட மாறுதலுக்குக் காரணம் அப்பிசாசுகளே என்பது தெரிந்து விட்டது. அவர்கள் தாம் கொண்டு வந்த வேப்பிலைக் குழைகளால் அப்பிசாசுகளை அடிக்கத் தொடங்கவே அவை கீச்கீச் சென்று கத்தியவாறே அந்த மரத்தை விட்டு ஓடியே போய்விட்டன.

அப்போது மனைவிகள் கந்தனையும் வரதனையும் பார்த்து ''வீட்டிற்குப் போகிறீர்களா? இல்லையா?'' என மிரட்டவே, அவர்கள் ''கொஞ்சம் பொறுங்கள். இந்த மரத்தின் பொந்தில் தங்கக் காசுகள் இருக்கின்றன'' எனக் கூறியதோடு அதைத் தேடினார்கள். அதிலிருந்து நிறையத் தங்க நாணயங்கள் அவர்களுக்குக் கிடைத்தன.

அவர்கள் வீடு திரும்பி அந்தத் தங்க நாணயங்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொண்டார்கள். இருவரும் மாடி வீடுகளைக் கட்டிக் கொண்டதோடு நாவல் மரத்தின் கீழிருந்த மண்மேடையைச் சலவைக் கல் மேடையாகவும் மாற்றி ஒழிந்த நேரத்தில் வழக்கம் போல அதன் மீது அமர்ந்து அரட்டை அடித்தும் வந்தார்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 மே மாத இதழில் வெளியிடப்படும்.



Tajy Prasad



Aruna Nistala

★ தலைபபுகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **அலங்கரித்து விட்டால் பிழைப்பு உண்டு**

இரண்டாவது போட்டோ : **அலங்கரிப்பை விற்றால் பிழைப்பு உண்டு**

பரிசு பெற்றவர் : **திரு. சி. பரமசிவம், தலைவாசல், சேலம் மாவட்டம்**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) March 1996 Regd. No. M. 4863

PARLE

# என்றும் மறவோம்... வாழ்நாள் வரை

## வாழ்க்கைப் பாதை இதுவே சரி

வாழ்க்கைப் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒரு சோதனையே. எந்தப் பாதையில் செல்வது, எதைத் தவிர்ப்பது: நம்மை வேறுபடுத்தும் அடையாளம் இதுவன்றோ. ஒருவித சுயநலமின்றி எதிர்பார்ப்பின்றி, பிறருக்கு உதவுதல்; பாதையில் செல்கையில், மற்றவர்களின் துயர் நீக்குதல். உண்மையான வாழ்க்கை என்பது இதுதானே. என்றும் மறவோம்... வாழ்நாள் வரை. வாழ்க்கைப் பாதை இதுவே சரி.

வருடக்கணக்காக இந்தியாவின் அனைத்திலும் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்




• சுவை மிகுந்தது, உண்மையான சக்தி நிறைந்தது •

everest/95/PPL/109 tm